# தெய்வத் தமிழ் வாசகம்



## ஐந்தாம் வகுப்பு



...டேசன் அண்டு கம்பெனி,
...ர்கெட், சென்னை-3

# தெய்வத் தமிழ் வாசகம்



## ஐந்தாம் புத்தகம்

ஐந்தாம் வகுப்பு

ஆசிரியர் :
வித்துவான். ஐ. நடேசப்பிள்ளை
பொன்னேரி

திருத்தியமைத்தவர்:
வித்துவான் இராஜ. சிவ. சாம்பசிவ சர்மா.
தமிழ் ஆசிரியர்
சென்னைக் கிறிஸ்தியன் காலேஜ் ஸ்கூல், சென்னை—10.

வெளியிடுவோர் :
V. C. வேங்கடேசன் கம்பெனி,
மூர்மார்கெட்டு, சென்னை—3.

 1954 விலை அணா 9

# முன்னுரை

**தெய்வத் தமிழ் வாசகம்** என்னும் இப்பாட புத்தக வரிசை கல்வி இலாக்கா அதிகாரிகளால் 1939ல் புதிதாகவெளியிடப்பட்ட ஆரம்பப் பாடசாலைப் பாடத்திட்ட முறையை முழுதும் பின்பற்றி எழுதப்பட்டிருக்கின்றது. இது **ஐந்தாம் வகுப்புச்** சிறுவர்க்குரிய **ஐந்தாம் புத்தகமாகும்.**

இப்புத்தகம் மாணவர்களின் பருவத்திற்கேற்றவாறு தெரிந்த பேச்சில் உபயோகப்படுகிற மொழிகளைக் கற்பிக்கக் கருவியாக அமைக்கப்பட்டிருக்கிறது. இப்புத்தகம் முடித்த மாணவர்கள் 800 **புதிய மொழிகளையும்** அவைகளடங்கிய சிறு வாக்கியங்களையும் பாடங்கள் மூலமாகவும் சம்பாஷணை மூலமாகவும் எழுதவும் படிக்கவும் பேசவும் கற்றவர்களாவார்கள்.

இப்புத்தகத்தைக் கண்ணுறுபவர், இது மாணவர்கட்குப் பெரிதும் இன்றியமையாததாயிருக்குமென்பதைச் செவ்விதின் உணர்வர். ஆகவே, கல்வியதிகாரிகளும் பாடசாலைத் தலைவர்களும் ஆசிரியர்களும் இதை ஆதரவு செய்து என்னைப் பின்னும் ஊக்குவார்களென நம்புகிறேன்.

எல்லாம் வல்ல இறைவனுடைய இணையடிகட்கு இதையருச்சிக்கும் என் கடன் பணி செய்து கிடப்பதே.

பொன்னேரி,<br>26—8—54

இங்ஙனம்,<br>**ஐ. நடேசன்,**

## பொருளடக்கம்

# தெய்வத் தமிழ் வாசகம்

## ஐந்தாம் வகுப்பு



## 1. நாட்டுப் பொது வாழ்த்து

ஜனகண மனஅதி நாயக ஜயஹே
பாரத பாக்யவி தாதா !
பஞ்சாப ஸிந்துகுஜ ராத மராத்தா
திராவிட உத்கல வங்கா,
விந்த்ய ஹிமாசல யமுனா கங்கா
உச்சல ஜலதித ரங்கா,
தவஸுப நாமே ஜாகே
தவஸுப ஆசிஷ மாகே
காஹே தவஜய காதா,
ஜனகண மங்கல தாயக ஜயஹே
பாரத பாக்யவி தாதா
ஜயஹே ! ஜயஹே ! ஜயஹே !
ஜயஜய ஜயஜய ஹே !

—இரவீந்திரநாத தாகூர்

## 2. மகாத்துமா காந்தியடிகள்

1. நாம் இன்று சுதந்தர இந்தியாவில் வாழ்கின்ருேம். நம் நாட்டு மக்கள் அனே வரும் ஆங்கிலேயரால் ஆளப்பட்டுவந்தனர். சுதந்தரத்தைப் போரின்றி அரும்பாடு பட்டு வாங்கி அளித்தவர் மகாத்துமா காந்தி அடி கள் ஆவர். அவர் நடத்திய சுதந்தரப் போர், உலகத்திற்கே புதுமையானது. காந்தியடிகள் மனித சமூகத்திற்கே தந்தையாராவர். இந் தியா என்றும் காந்தியடிகளே மறக்க முடி யாது.

2. இந்தியாவில் பம்பாய் மாகாணத் தைச் சேர்ந்த குஜராத்தில், **போர்பந்தர்** என் னும் ஊரில், 1869-ஆம் ஆண்டு காந்தியடிகள் பிறந்தார். அவருடைய தந்தையார், **காபா காந்தி** என்பவர் ஆவர் ; தாயார் **புத்தளிபாய்** என்ற பெயருடைய அம்மையார். தாய் தந்தையர் தம் குழந்தைக்கு இட்ட பெயர் **மோகனதாஸ் கரம்சந்து காந்தி** என்பது.

3. காந்தியடிகள் இளமைப் பருவத்தி லேயே பல நற்குணங்கள் வாய்ந்திருந்தார். அவர் தாய் தந்தையரிடம் மிக்க அன்புடைய வர்;பெற்ருேர் சொல்லே ஒரு பொழுதும் தட்டி

நடவாதவர். 'உண்மையே பேசவேண்டும்' என்ற உணர்ச்சி அவருக்கு இளமைப் பருவத்தி லேயே மனத்தில் வேரூன்றிவிட்டது. அவர் தம் ஊரிலுள்ள கலாசாலையில் படித்து முடித்தபின் சட்டப் படிப்புக்காக இங்கிலாந் துக்குச் சென்ருர். அவர் தாயாரிடம் கூறியபடி இங்கிலாந்தில் வசித்த காலத்தில் மாமிசம், குடி என்பவற்றை அறவே அகற்றியிருந் தார். இங்கிலாந்தில் அவர் ஆடம்பரம் இல் லாமல் எளிய வாழ்க்கையையே நடத்தினர்.

4. சட்டப் படிப்பிற்குப் பின் இந்தியா விற்கு வந்து காந்தியடிகள் வக்கீல் தொழிலை நடத்தினர். காந்தியடிகள் தென்னுப்பிரிக்கா விற்குச் செல்லவேண்டியதாயிற்று. தென்னுப் பிரிக்காவில் இந்தியர் குடியேறியிருந்த னர். அவர்களுள் தமிழ் மக்களே அதிகம். அவர்கள் அங்குப் பயிர்த்தொழில் வேலைக்குச் சென்ருர்கள். வெள்ளையர்கள் அவர்களுக்குச் சொல்ல முடியாத துன்பத்தினைக் கொடுத் தார்கள். இந்தியர் நிலையை அறிந்தார் காந்தி; அங்கு இந்தியர் சம உரிமை பெற்று வாழும் படி செய்வதற்கு அரும்பாடு பட்டு, முடிவில் வெற்றி பெற்ருர்.

5. இந்தியாவிற்குக் காந்தி வந்த பொழுது இங்கும் சுதந்தரத்திற்காக மக்கள்

கிளர்ச்சி செய்தார்கள். காங்கிரஸ் மகா சபை என்பது ஒன்று ஏற்பட்டிருந்தது. அதில் காந்தி சேர்ந்து இந்தியாவின் சுதந்தரத்திற் காகப் பாடு பட்டார். அவர் அஹிம்ஸை, உண்மை என்னும் இரண்டினையும் கடைப் பிடித்துச் சாத்துவிகமான முறையில் போர் நடத்தினர்; உப்புச் சத்தியாக்கிரகம், ஒத் துழையாமை இயக்கம், கதர் இயக்கம், அந்நிய நாட்டுப் பொருள்களை நீக்குதல் முதலான வைகளைக் கையாண்டார். இந்திய மக்கள் காந்தியடிகளைப் பின்பற்றினர்கள். அதனல் ஆங்கில அரசாங்கத்திற்குப் பல வகையில் தடை ஏற்பட்டது. அதனல் அரசாங்கத்தார் பலமுறை காந்தியடிகளைச் சிறை செய்தனர்.

6. காந்தியடிகளை வல்லபபாய் பட் டேல், ஜவஹர்லால் நெஹ்ரு போன்றவர் கள் துணையாய் நின்று ஊக்கினர்கள். காந்தி யடிகளும் அவர் மனைவியாரான கஸ்தூரிபா அம்மையாரும் விடாது உழைத்தனர். கஸ்தூரிபா அம்மையார் காந்தியடிகள் சிறையில் இருக்கையில் இவ்வுலக வாழ்வை நீத்தார்.

7. காந்தியடிகளின் பெருமுயற்சியால் 1947-ஆம் ஆண்டு இந்தியா சுதந்தரம் பெற் றது. இந்தியா பூர்ண விடுதலையை அடைந்

தது. இந்தியர் அனைவரும் பிற சுதந்தர நாட்டு மக்களைப் போன்று எல்லா நாட்டின ராலும் மதிக்கப் பெற்றனர். 1948-ஆம் ஆண்டு, ஜனவரி மாதம், 30-ஆம் தேதி, காந்தி யடிகள் பிரார்த்தனைக் கூட்டத்திற்கு வந்த பொழுது ஒரு வஞ்சகன் அவரைச் சுட்டுக் கொன்றான். அச்செய்தி காட்டுத் தீப்போல விரைவில் உலகெங்கும் பரவிற்று. உலகத் தார் அனைவருமே அழுதனர். உத்தமர் காந்தி யடிகள் அமரரானார். அவரது தூய நல்லாவி என்றும் இந்தியர்க்கு உறுதுணையாய் இருந்து காக்கும் என்பது திண்ணம்.

**அரும்பதங்கள்:**

| | | |
|---|---|---|
| **சுதந்தரம்** | **உணர்ச்சி** | **சத்தியாக்கிரகம்** |
| **அனைவரும்** | **சட்டப்படிப்பு** | **ஒத்துழையாமை** |
| **அரும்பாடு** | **ஆடம்பரம்** | **அரசாங்கத்தார்** |
| **சமூகம்** | **சமவுரிமை** | **பிரார்த்தனை** |

**கேள்விகள் :**

1. காந்தியடிகளை ஏன் இந்தியர் மறக்க முடியாது?
2. காந்தியடிகளின் தாய் தந்தையர் யாவர்?
3. காந்தியடிகள் சொல் தவறாதவர் என்பதை எவ்வாறு அறியலாம்?
4. தென்னாப்பிரிக்காவிற்குக் காந்தியடிகள் செல் லக் காரணம் என்ன? அங்கு அவர் செய்தது என்ன?

5. காங்கிரஸ் மகாசபை எதன்பொருட்டு ஏற்பட்டது?
6. காந்தி எவ்விரண்டு கொள்கைகளைக் கடைப்பிடித்தார்?
7. காந்தி இந்தியாவில் தோற்றுவித்த இயக்கங்கள் யாவை?
8. காந்திக்குத் துணையாய்ச் சுதந்தரப்போரில் துணை செய்தவர் யாவர்?
9. இந்தியர் எந்த ஆண்டு சுதந்தரம் பெற்றனர்?
10. காந்தியடிகள் மறைந்தது எப்படி?

**பயிற்சி—1**

1. தேசபத்தர்களில் உனக்குத் தெரிந்தவர் யாவர்?
2. ஜவஹர்லால் நெஹ்ருவைப் பற்றி உனக்கு என்ன தெரியும்?
3. இராஜேந்திரப் பிரஸாது என்பவரைப்பற்றி நீ என்ன கேள்விப்பட்டிருக்கிறாய்?

**பயிற்சி—2**

கீழ்வருபவர்களைப் பற்றிக் கேட்டேனும், படித்தேனும் அறிந்துகொள் :—

1. பாலகங்காதர திலகர்
2. வ. உ. சிதம்பரம் பிள்ளை
3. சுபாஷ் சந்திர போஸ்
4. சரோஜினி தேவியார்

**பயிற்சி—3**

கீழ்வருவனவற்றை அமைத்து வாக்கியங்கள் எழுது :—

1. புதுமையானது
2. மறக்க முடியாது
3. எளிய வாழ்க்கை
4. அரும்பாடு பட்டு
5. கிளர்ச்சி
6. சாத்துவிகம்
7. கடைப்பிடித்து
8. பல வகை
9. காட்டுத் தீப்போல
10. உறுதுணை

# 3. கதைப் படம்




படம் பார்த்துக் கதை சொல் ; எழுது.

# 4. தமிழ் மொழி

1. மாணவர்களே, நாம் படிப்பது தமிழ் மொழி அல்லவா? நாம் இளமைமுதல் பேசி வருவதும் தமிழ்தானே? நாம் குழந்தையா யிருந்தபோது நம் தாய், நம்மைத் தொட்டி லில் கிடத்திப் பாடிய தாலாட்டும் தமிழ் தானே? நம்மைப் பெற்ருேர் சீரும் சிறப்பு மாகக் கொஞ்சியபோது, 'கண்ணே, மணியே, கிளியே, உயிரே,' என்றெல்லாம் அழைத்தனர் அல்லவா? இந்த மொழிகள் யாவும் தமிழ் தானே? ஆகையால், இந்தத் தமிழ் மொழியே நம் தாய்மொழியாகும்.

2. நம் தாய்மொழியாகிய தமிழ் இனிமை யான ஒலியுடையது; மிகப் பழமையானது; பண்பட்டது; தெய்வத்தன்மை வாய்ந்தது. ஆகையால், இதைப் புலவர்கள் **செந்தமிழ், நற் றமிழ், இன்றமிழ், தீந்தமிழ், பைந்தமிழ், கட வுட்டமிழ், தண்டமிழ், மென்றமிழ், பொற்ற மிழ், தெய்வத்தமிழ்** எனப் புகல்கின்ருர்கள். தமிழ் என்பதற்கு இனிமை என்பதே பொருள்.

3. நமது தாய்மொழி, பல்லாயிரம் ஆண்டு களுக்கு முன் உண்டானது; கீழ் நாட்டு

மொழிகள் யாவற்றிலும் சிறந்தது ; வடக்கில் வேங்கடம் முதல் தெற்கில் கன்னியாகுமரி முனை வரையில் வழங்கப்பட்டது ; வேறு மொழியின் துணை இன்றி வழங்கக்கூடியது ; அரசர்களாலும் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

4. தமிழ் மொழியில் மேலான நூல்கள் உண்டு. மக்களுக்குச் சிறந்த ஒழுக்கங்களை ஓதுகின்ற நீதி நூல்கள் தமிழில் மிகவுண்டு. அவற்றுள் மிகச் சிறந்தவை **திருக்குறள், நாலடியார்** என்பவை. இதனாலேயே தமிழ் மொழி பெருமை மிக்கது எனப்படும்.

5. எண்ணத்தை எளிதில் எடுத்துக் காட்டும் திறமை தமிழுக்கு உண்டு. கடவுளைத் துதி செய்து தமிழில் அமைக்கப்படும் செய்யுட்கள் மிக உருக்கமாயிருக்கும். தமிழ்ப் பாட்டுக்கள் கல்மனத்தையும் கரைத்துவிடும். தெய்வ பத்தியை உண்டாக்கி வளர்ப்பதில் தமிழ் போன்ற மொழி வேறு இல்லை. தமிழ்ச் செய்யுளின்மீது தெய்வமும் விருப்பமுடையது. அது எப்படித் தெரிகிறது என்கிறீர்களா? சிவபெருமான், சுந்தரமூர்த்தி நாயனாரை நோக்கித் 'தமிழ் பாடுக,' என்றதாலும், சுந்தரர் '**பித்தா**' என்று தொடங்கிப் பாடியதைக் கேட்டுப் பரமன் மகிழ்ந்ததாலும் தெரிகிறது. சம்பந்தமூர்த்தி சிவபெருமானைக்

**'கள்வன்'** என்றதற்கும், பெருமான் பெரிதும் களித்தான். மேலும், பாண்டியனுடைய சுர நோயைத் தவிர்த்ததும் தமிழே; அப்பரைப் பரவையில் மூழ்காமல் செய்ததும் தமிழே என்பதையும் நீங்கள் படித்திருக்கிறீர்கள்.

6. இது மாத்திரமா? தமிழ் மொழியை வெளிநாட்டினர் பலர் புகழ்ந்திருக்கின்றனர்: மகாத்துமா காந்தி, **"தமிழ் கற்றவர்கள் அறிவும் திறமையும் ஞானமும் உடையவர்கள்,"** என்னும் கருத்துடன் தமிழைச் சிறப்பித்திருக்கிறார். நம் நாட்டுப் **பூரணலிங்கம் பிள்ளை, சுந்தரம் பிள்ளை, பாரதியார்** முதலியவர்களும் தமிழே தகுதியின் மிக்க மொழி என மொழிந்திருக்கின்றார்கள்.

7. இத்தகைய தமிழ் மொழியைத் தமிழர்களாகிய நாம் நன்கு கற்கவேண்டும்; கற்பிக்க வேண்டும். 'தெருவெல்லாம் தமிழ் முழக்கம் செழிக்கச் செய்தல் வேண்டும்.' அப்போது தமிழ் மக்கள் வீரவுணர்ச்சி, நடுவு நிலைமை, தெய்வபத்தி என்னும் நல்லியல்புடையவர்களாய் இருப்பார்கள். **இளங்கோவடிகள் சீத்தலைச் சாத்தனார், கம்பர், திருவள்ளுவர்** முதலியவர்களின் சிறப்பே இதற்குச் சான்றாகும்.

8. ஆகையால், தமிழராகிய நாம்—தமிழ் நாட்டில் பிறந்து வளர்ந்து வாழும் நாம்—

தமிழை மறத்தலாகாது. தமிழ் மொழியைப் பெரிதும் பரவச் செய்ய வேண்டுவது நம் பொறுப்பு.

**அரும்பதங்கள் :**

| | | |
|---|---|---|
| பண்பட்டது | கரைத்து | முழக்கம் |
| புகல் | தவிர்த்தது | நல்லியல்பு |
| பொருட்டு | நடுவு நிலைமை | மறத்தல் |
| மூழ்காமல் | சான்று | பொறுப்பு |

**பயிற்சி—1**

(அ) பழைமை, கீழ் நாடு—எதிர்மொழி கூறு.

(ஆ) துணை என்பதைக் குறிக்கும் வேறு சில மொழி கூறு.

(இ) பரவை,பறவை—பொருள் வேறுபாடு கூறு.

(ஈ) நூல், படி —— இம்மொழிகளுக்கு இரு பொருள் கூறு.

(உ) தகைமை, கள்ளன், பித்தன் —— பொருள் எழுது.

(ஊ) நலஞ்சிறந்தது, சிறப்பித்திருக்கிருர், மறத்தலாகாது—பதம் பிரித்தெழுது.

(எ) தனி வாக்கியங்களாகப் பிரி :—பாண்டியனுடைய சுரத்தைத் தீர்த்து, அப்பரைக் கடலில் மிதக்கச் செய்து, கல்லோடு கரையேற்றிவிட்டது தமிழே.

(ஏ) இம்மொழிகளைத் தொடரில் அமை :—சீரும் சிறப்பும், பண்படும், தகைமை, நாட்டினர்.

(ஐ) கோடிட்ட இடத்தில் தகுந்த மொழியை அமைத்தெழுது.

1. நமக்குத்——மொழி தாய்மொழி.

2. தமிழில் பல நீதி——உண்டு.

3. பாரதியார் தமிழே——மிக்க——என மொழிந்துள்ளார்.

**கேள்விகள் :**

1. தமிழ் எப்படிப்பட்ட ஒலியுடையது?

2. தமிழில் உள்ள நூல்களுள் சிறந்தவை எவை?

3. மகாத்துமா காந்தி தமிழை எப்படிப் புகழ்ந்தார்?

**இலக்கணம் :**

உயிரெழுத்துக்கள் பன்னிரண்டு, அவை, அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ, ஒ, ஓ, ஔ என்பனவாகும். அவற்றுள் அ, இ, உ, எ, ஒ, என்னும் ஐந்தும் குறுகிய ஓசையுடையவை; ஆதலால், அவை **உயிர்க்குறில்** எனப்படும். ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ என்னும் ஏழும் நீண்ட ஓசையுடையவை; ஆதலால், அவை **உயிர் நெடில்** எனப்படும்.

**தமிழ் இனிய ஓசையுடையது; ஆகையால், அதை எவரும் விரும்புகின்றனர்.**—இந்தத் தொடரில் உள்ள உயிர்க்குறில், உயிர் நெடில் எழுத்துக்களை எடுத்து எழுது.

# 5. அதிவீரராம பாண்டியர்

1. தமிழ் நாட்டில் முடி மன்னர் மூவர் இருந்தனர் என்றும், அவர்களுள் பாண்டி நாட்டை ஆண்டவர்கள் பாண்டியர் என்றும் முன்னரே படித்திருக்கிறீர்கள். பாண்டியர்கள் மதுரையைத் தலைநகராகக் கொண்டு வாழ்ந்தவர்கள். அவர்களுக்குக் கீழ்ச் சில சிற்றரசர்கள் இருந்தார்கள். சிற்றரசர்களுள் **வரதுங்கபாண்டியர்** என்பவர் ஒருவர். வரதுங்கர் **திருக்கருவை** என்னும் நகரில் இருந்து ஆட்சி செய்தார். அவருக்கு ஒரு தம்பியார் உண்டு. அவர் பெயர் **அதிவீரராம பாண்டியர்**. அவர் **தென்காசி** என்னும் பதியில் இருந்து அரசு செலுத்தினர்.

2. வரதுங்கரும் அதிவீரராமரும் கல்வியில் சிறந்தவர்; அறிவு நிறைந்தவர்: ஒழுக்கத்தின் கரை கண்டவர்; கருணையும் ஈகையும் உடையவர். இருவருக்கும் வடமொழி, தென்மொழி என்னும் இரண்டிலும் புலமை உண்டு; அதனல், தமிழில் இனிமையாகப் பாடும் வல்லமை பெற்றிருந்தனர். வரதுங்கர் தமது கவித்திறமையைப் பத்தியில் பயன்படுத்தினர்; திருக்கருவையில் கோவில்

கொண்டுள்ள சிவபெருமானைப் பாடிப்பாடி மகிழ்ந்தார். அதிவீரராமருடைய கல்வித் திறமை மற்ற வகையில் பயன்பட்டது. அவர் **நைடதம்** என்னும் நூல் ஒன்றைச் செய்தார். நைடதம் என்பது நிடத நாட்டில் நிகழ்ந்த கதை. அது **நளன்** என்னும் மன்னனைப் பற்றிய கதை.

3. நைடதம் எழுதிய அதிவீரராமர் அதை வரதுங்கருக்குக் காட்டினார். வரதுங்கர், 'இந்தக் கதை எழுதியதைவிட இறைவனைப் பாடியிருக்கலாம்,' என்றார். வரதுங்கர் மனைவியார் 'இந்நூல் தொடக்கத்தில் சுவை நிறைந்ததாயும், போகப் போகச் சுவை குறைந்ததாயும் உள்ளது,' என்றார். இருவரும் கூறிய சொல்லால் அதிவீரராமருக்குச் சினம் பிறந்தது; பின்பு வளர்ந்தது. அதிலிருந்து பகை அரும்பியது. நாளடைவில் அப்பகை அதிகப்பட்டது.

4. பகை கொண்ட அவர் படைதிரட்டிக் கொண்டு தமையனார்மீது போருக்குக் கிளம்பினார். தம்முடன் தம்பியார் சண்டைக்கு வரும் செய்தியை வரதுங்கர் அறிந்தார்; தம்பியாருடன் சமாதானம் செய்ய நினைத்தார்; ஓர் ஓலை எழுதித் தூதன் ஒருவனிடம் தந்தனுப்பினார். அதைத் தம்பியார் வாங்கிப் படித்துப்

பார்த்தார். அதில் என்ன எழுதியிருந்தது? **“சுக்கிரீவன், விபீடணன், அருச்சுனன் முதலியவர்களைப் போல நீ வாழ நினையாதே; இராமன், பரதன் என்னும் இருவரைப் போல இருக்க நினை,”** என்பதுதான்.

5. மேலே கூறியதன் கருத்து என்ன? **‘பகைமை பாராட்டக்கூடாது; அன்பு கொண்டிருத்தல் வேண்டும்,’** என்பதுதான். அதைப் படித்துப் பார்த்த அதிவீரராமர் என்ன செய்தார்? பின்னரும் போர் செய்ய விரும்புவாரா? அவர் படைகளைத் திருப்பித் தென்காசிக்கே அனுப்பிவிட்டார். “ஆ! என்ன மூடபுத்தி! அவசரத்தால் அறிவை இழந்தோமே! அண்ணனோடு அமர்புரியத் தொடங்கினோமே! யாரும் துணிவதற்கரிய காரியத்தில் நாம் துணிந்தோமே! **‘கோபம் பாபத்துக்கு அஞ்சாது,’** என்றபடி ஆயிற்றே! **‘ஆறுவது சினம்,’** என்பதை அடியோடு மறந்தோமே!” என்று மனம் வருந்தினர்.

6. அதிவீரராமர் மனம், வருந்தியதோடு அமையாமல், திருந்தியது. திருந்திய நெஞ்சம் இனிச் செய்யவேண்டுவது யாது என நினைத்தது; ‘அண்ணனை அணுகி அடிபணிந்து மன்னிப்புக் கேட்பதே முறை,’ என உணர்ந்தது. அப்படியே அதிவீரராமர் செய்தார். வந்து

வணங்கிய தம்பியாரை வரதுங்கரும் அன்பு கனிந்து அணைத்துக்கொண்டார். 'தம்பி, நீ யாது குற்றம் செய்தாய்? ஒன்றுமில்லை. வருந்தாதே. நீ கேளாத முன்னரே யான் உன்னை மன்னித்துவிட்டேன்,' என்றார். அவருடைய அன்பையும் அதி மேன்மை யான குணத்தையும் அதிவீரராமர் அறிந் தார்; அவரை எப்படியும் மகிழ்விக்க வேண்டும் என யோசித்தார்; 'உலகத்து மக்க ளுக்கு நல்லறிவு கூறும் நீதி நூல் ஒன்றை எழுதலாம்; அதைக் கண்டு வரதுங்கரும் அவருடைய மனைவியாரும் களிப்பார்கள்,' எனத் தெளிந்தார்; அப்படியே அரிய நூல் ஒன்றை எழுதினார். அதன் பெயர் **நறுந் தொகை.** அதன் முதற்பாட்டு,

'வெற்றி வேற்கை வீர ராமன்
கொற்கை யாளி குலசே கரன்புகல்
நற்றமிழ் தெரிந்த நறுந்தொகை தன்னால்
குற்றங் களைவோர் குறைவிலா தவரே.'

என்பதாகும். இப்பாட்டின் முதலில் 'வெற்றி வேற்கை' எனத் தொடங்கியிருப்பதால், அதி வீரராமர் எழுதிய நீதி நூலாகிய நறுந் தொகையை **வெற்றி வேற்கை** என்றும் கூறுவ துண்டு. அந்த நீதி நூலின் முதலில் கடவுள் வணக்கமாகவும் குரு வணக்கமாகவும் ஒரே

பாட்டு எழுதப்பட்டுள்ளது. அது, '**எழுத்தறி வித்தவன் இறைவ னாகும்,**' என்பது. தமிழ் நாட்டுப் புரவலராகவும் தமிழ்ப் புலவராகவும் விளங்கிய அதிவீரராமர் எல்லோராலும் புகழப்பட்டு வருகிறார்.

**அரும்பதங்கள் :**

| | | |
|---|---|---|
| பதி | பூண்டிருத்தல் | நறுந்தொகை |
| புலமை | அமையாமல் | களைவோர் |
| தொடக்கம் | அணுகி | நற்றமிழ் |
| அரும்பியது | மன்னிப்பு | இறைவன் |
| தூதன் | கனிந்து | |

**பயிற்சி :**

(அ) தந்தனுப்பினார், வருந்தியதோடமையால்——பதம் பிரி.

(ஆ) நெஞ்சம், அணுகி, புகல்—பொருள் எழுது.

(இ) குற்றம் என்பதைக் குறிக்கும் வேறு சில மொழிகள் எழுது.

(ஈ) அறிய, அரிய——பொருள் வேறுபாடு கூறு.

(உ) தூதன், திருப்பி, திருந்திய——இம்மொழி களைத் தொடரில் அமை.

(ஊ) அண்ணனை அணுகி, அடிபணிந்து, மன்னிப் புக் கேட்பதே முறை என உணர்ந்தார்.——தனி வாக்கி யங்களாகப் பிரித்தெழுது.

(எ) அதிவீரராமர் செய்தியைப் பற்றிய ஐந்து சொற்றொடர்களை எழுது.

(ஏ) கோடிட்ட இடத்தை நிரப்பு :—

1. தமிழ்——முடி——மூவர்——.

2. இருவரும் கூறிய——அதிவீரராமருக்குச்——

3. எழுத்து——இறைவன்.

**கேள்விகள் :**

1. பாண்டியருடைய தலைநகரம் எது?

2. அதிவீரராமர் எழுதிய நூல்கள் எவை?

**இலக்கணம் :**

அது, இது என்னும் மொழிகள் ஏதாவது ஒன்றைச் சுட்டிக் காட்ட அப்பையன், இப்பசு என்று வரும். ஆகையால், அ, இ இரண்டும் சுட்டெழுத்துக்கள் எனப்படும்.

'எது? ஏன்?' என்னும் மொழிகள் கேள்வியின் பொருட்டு வரும். 'அவனோ? வீட்டிலா?' என்பனவும் கேள்விகளே. ஆகையால், ஆ, எ, ஏ, ஓ இந்த நான்கு எழுத்துக்களும் வினா எழுத்துக்கள் எனப்படும்.

அந்த வீடு என்னுடையது. இந்த மரம் உன்னுடையதா? இப்பசு பெரியதா? அப்பசு ஏன் ஓடுகிறது? இத்தொடர்களில் உள்ள சுட்டெழுத்து, வினா எழுத்துக்களை எடுத்தெழுது.

# 6. மௌன வாசிப்பு—I

1. மேல் நாடுகளில் முன் காலத்தில் செல்வர்கள் அடிமைகளை வைத்திருந்தார்கள். அந்த அடிமைகளை அச்செல்வர்கள் வாங்கும் பொழுது தாயை ஒருவன் வாங்குவான்; மகனை ஒருவன் வாங்குவான்; தகப்பனை வேறொருவன் வாங்குவான். அவர்கள் பிரிந்து சென்றால், மீண்டும் ஒன்று கூடுவதில்லை. அச்செல்வர்கள் அடிமைகளை மிகவும் கொடுமையாக நடத்துவார்கள். வேலையோ, அதிகமாகவும் கடினமாகவும் இருக்கும். அவர்களுக்குக் கொடுக்கப்படும் உணவோ, மிகவும் அற்பமானதாகவும் குறைவானதாகவும் இருக்கும். ஆயிரம் பொன் அளித்தால் அடிமை விடுதலை பெறுவான்.

2. ஒரு பெரிய பணக்காரனிடம் இருவர் அடிமைகள் இருந்தனர். அவ்விருவரும் சகோதரர்கள். அவர்களில் இளையவன் புத்திசாலி; சுறுசுறுப்புள்ளவன்; உழைப்பவன். மூத்தவன் அத்தகையவன் அல்லன். இளையவன் தன் அறிவாலும் உழைப்பாலும் நீண்டநாள் உழைத்து ஆயிரம் பொன் சேர்த்தான். அவன் அந்த ஆயிரம் பொன்னையும் எடுத்துச்

சென்று தன் எஜமானனிடம் கொடுத்துத் தன் அண்ணனை விடுதலை செய்யுமாறு கேட்டுக்கொண்டான். எஜமானனுக்கு அவன் செயல் வியப்பைத் தந்தது. அச்செல்வன் அடிமையை நோக்கி, "நீ உன்னை விடுவித்துக் கொள்ளாமல் உன் அண்ணனை விடுவித்துக் கொள்ளக் காரணம் என்ன?" என்று கேட்டான்.

3. இளையவன் செல்வனை வணங்கி, "ஐயா, என் அண்ணன் என்னைப்போல அறிவும் சுறுசுறுப்பும் உடையவன் அல்லன். இச்சமயம் நான் அவனை விடுவிக்காவிட்டால், அவன் சாகும் வரையில் அடிமையாகவே இருக்க வேண்டும். அவனை விடுவித்துவிட்டால் நான் சிறிது காலத்திற்குள் என் புத்தியாலும், சுறுசுறுப்பாலும், உழைப்பாலும் ஆயிரம் பொன் சேர்த்து என்னையும் விடுவித்துக்கொள்வேன். ஆதலால், இந்த ஆயிரம் பொன்னையும் பெற்றுக்கொண்டு என் அண்ணனை விடுவியுங்கள்," என்று வேண்டிக்கொண்டான்.

4. அச்செல்வன் அவ்வடிமையினிடமிருந்த அன்புடைமையை நன்குணர்ந்தான். அவ்வடிமையினிடம் காணப்பட்ட தன்னலம் கருதாத தன்மை செல்வன் மனத்தைக்கவர்ந்தது.

அவ்விருவரையும் செல்வன் அந்த நிமிஷமே விடுதலை செய்தான். இருவரும் அன்போடு வாழ்ந்து வந்தனர்.

பயிற்சி :

1. இந்தக் கதையைச் சொல்; எழுது.
2. இதற்கு என்ன தலைப்புக் கொடுக்கலாம்?

---

# 7. செவ்விந்தியர்

1. முன் காலத்தில் மக்கள், நாம் இப்பொழுது உலகத்தை அறிந்திருப்பது போல அறிந்திருக்கவில்லை. போக்கு வரவுச் சாதனங்கள் அதிகமாய் இல்லை. அதனால், அவரவர்கள் அங்கங்கேயே தங்கி வாழ்ந்தார்கள். மனிதர் அறிவு வளர வளரப் பல வகைச் சாதனங்களை வாழ்க்கைக்குத் தேடிக்கொண்டனர்; உணவு, உடை, போக்குவரவுச் சாதனங்கள், வீடு முதலியனவற்றால் மேம்பட்டு வந்தனர்; பின்பு அறிவுப் பசியால் பற்பல புதியவற்றைக் கண்டு பிடித்தனர்; பிற தேசங்களைச் சென்று காண முயன்றனர்; அதற்கு

வேண்டிய சாதனங்களையும் தேடிக்கொண்டனர்.

2. ஐரோப்பியர் நாடு காணும் முயற்சியில் பெரிதும் முயன்றனர்; இந்தியாவிற்குக் கடல் வழியைக் காண்பதற்கு முயன்றனர். அம்முயற்சியில் ஈடுபட்டவர்களுள் **கொலம்பஸ்** என்பவர் ஒருவர். கொலம்பஸ் இத்தாலி நாட்டில் பிறந்தவர். அவர் நாடு காணும் முயற்சியில் இறங்கினர். அவருக்குப் போர்ச்சுகல் நாட்டு அரசியார் உதவி செய்தார்.



3. 'இந்தியாவை எப்படி அடையலாம்?' என்று அவர் சிந்தித்தார். ஐரோப்பாவிலிருந்து மேற்கு நோக்கிச் சென்றால், இந்தியாவை அடையலாம் என்று அவர் எண்ணினர். அதன்படி அவர் மூன்று கப்பல்களைத் தயாரித்துக்கொண்டு புறப்பட்டார். அவருடன் சிலர் துணையாகச் சென்றனர். அவர் கொண்டு சென்ற கப்பல்கள் பாய்மரக்கப்பல்கள்; காற்றின் துணையால் செல்ல வேண்டியவை. அவர் நீண்ட நாட்கள் கடல்மீது சென்றார். மேற்கு நோக்கிச் சென்ற கொலம்

பஸ் ஒரு நிலப்பரப்பை அடைந்தார். அதனை அவர் இந்தியா என்று கருதினார். ஆனால், அது இந்தியா அன்று. அது ஒரு புதிய கண்டம். அப்புதிய கண்டந்தான் அமெரிக்காக் கண்டம்.

4. அங்கிருந்த மக்கள் சிறிது செந்நிறம் பொருந்தியவர்கள். அவர்களே **செவ்விந்தியர்கள்.** அவர்கள் அமெரிக்காவில் பல இடங்களில் வாழ்ந்தனர். அவர்கள் நீண்ட தலை மயிரை உடையவர்கள். அவர்கள் விழிகள் கருமையாய் இருக்கும். அவர்கள் கூட்டங் கூட்டமாய் வாழ்ந்து வந்தார்கள். வேட்டையாடுவதும் பயிரிடுவதுமே அவர்கள் தொழில்கள்.



5. செவ்விந்தியர்கள் உடை விநோதமானது. அவர்கள் மிருகங்களின் தோல்களை

உடையாக அணிந்துகொள்வார்கள். அவர்கள் ஆபரணங்கள் மிகுந்த வியப்பைத் தரும். நம் நாட்டுக் குருவிக்காரர்போல அவர்கள் பல வகை மணிகளையும் கிளிஞ்சில்களையும் அணிந்துகொள்வார்கள்; பறவைகளின் இறகுகளைக்கொண்டும் தங்களை அலங்கரித்துக் கொள்வார்கள். ஆடவர்கள் பறவைகளின் இறகுகளை மயிலின் தோகை போல அமைத்துத் தலையில் அணிந்துகொள்வார்கள். பெண்கள் தலை மயிரைப் பின்னித் தொங்கவிட்டுக் கொள்வார்கள்.

6. வெப்பமான காலத்தில் செவ்விந்தியர் கூடாரங்களில் வசிப்பர். அவர்கள் காய்




கனி கிழங்குகளையும், வேட்டையாடிய விலங்குகளின் இறைச்சியையும் உண்பார்கள். அவர்களுடைய முக்கிய உணவு சோளம். அவர்கள் நாணயத்திற்குப் பதிலாகச் சோழிகளையும் மணிகளையும் உபயோகிப்பார்கள். அவர்களுடைய கூடாரங்கள் விலங்குகளின் தோலாலும் மரப்பட்டையாலும் ஆனவை. அவை **'விக்குவாம்'** எனப்படும். அவர்கள்

ஆயுதம் கோடரி போன்றது. அதற்குத் **தொமோஹாக்கு** என்னும் பெயர் வழங்கும். அவர்கள் தங்களை விலங்கு வமிசத்தவர் என்றும், பறவை வமிசத்தவர் என்றும்



கூறிக்கொள்வார்கள் ; ஆகையால், அவர்களுக்கு விலங்குகள் பறவைகள் பெயரே வழங்கும். அவர்கள் விலங்கு களையும் பறவைகளையும் தெய்வங் களாகக் கருதி வழிபடுவார்கள். அவர் கள் வேட்டையாடும் மிருகங்களில் சிறந்தது பைஸன் என்னும் காட் டெருமை. அவர்களுக்குள் ஒரு வமி சத்தவர் மற்றொரு வமிசத்தவரை மணந்துகொள்வதில்லை.

7. செவ்விந்தியர்கள் மிக்க தேகபலம் வாய்ந் தவர்கள். வலை பின்னுதல், மண் பாண்டம்




செய்தல், எலும்புக ளால் தூண்டில் முள் செய்தல் முதலியன அவர்கள் தொழில் கள். இலேசான பட குகளின் துணையால் அவர்கள் நீர் நிலைகளைக் கடப்பார்கள். செவ் விந்தியர் இக்காலத்தில் நாகரிகத்தில் முன் னேற்றம் அடைந்து வருதல் மகிழத்தக்கது.

### அருஞ்பதங்கள் :

| | | |
|---|---|---|
| போக்குவரவு | கண்டம் | வியப்பு |
| சாதனம் | தீவு | கிளிஞ்சில் |
| மேம்பட்டு | விநோதம் | நாணயம் |
| ஈடுபட்டார் | வளர வளர | வமிசம் |

### கேள்விகள் :

1. மக்கள் அறிவு வளர்ச்சியினால் அடைந்த நன்மை என்ன ?
2. கொலம்பஸ் யார் ? அவர் எதில் ஈடுபட்டவர் ? அவருக்கு யார் உதவி புரிந்தார் ?
3. கொலம்பஸ் எதனை இந்தியா என்று கருதினார்?
4. 'புதிய கண்டம்' என்பது எதனை ?
5. கொலம்பஸ் கண்டு பிடித்த தீவின் பெயர் என்ன ?
6. செவ்விந்தியர் எங்கு வசித்தனர் ?
7. செவ்விந்தியர் எங்ஙிலத்துப் பூர்விகக் குடிகள் ?
8. அவர்கள் நிறம், தொழில், உடை, வாழ்க்கை என்பன பற்றி எழுது.
9. அவர்களுக்குள் உள்ள பிரிவு யாது ? அதனைப் பற்றி உனக்கு என்ன தெரியும்?
10. செவ்வியர்களைப் பற்றிப் பத்து வரிகள் எழுது.

### பயிற்சி—1

கீழ் வருவனவற்றை அமைத்துத் தனித்தனி வாக்கியங்கள் எழுது :—

வளரவளர, போக்குவரவு சாதனம், பற்பல, கடல் வழியாக, முயற்சியில் இறங்கல், கூட்டங்கூட்டமாய், வமிசம்.

### பயிற்சி—2

1. உலகில் எத்தனை கண்டங்கள் உள்ளன? அவற்றின் பெயர்களை எழுது.

2. உலகில் எத்தனை பெருங்கடல்கள் உள்ளன? அவற்றின் பெயர்களை எழுது.

3. உனக்குத் தெரிந்த தீவுகள் சிலவற்றின் பெயர்களை எழுது.

4. தீவு என்பது என்ன?

5. முன்காலத்தில் கடல்மீது சென்றதற்கும், இக்காலத்தில் கடல்மீது செல்வதற்கும் உள்ள வித்தியாசம் என்ன?

### பயிற்சி—3

கீழ் வருவோர்களைப் பற்றிக் கேட்டுத் தெரிந்துகொள்; அல்லது படித்துத் தெரிந்துகொள் :—

| | | |
|---|---|---|
| சிங்களர் | சீனர் | பிக்மிகள் |
| பர்மியர் | அரபியர் | திபேத்தியர் |
| ஜப்பானியர் | எஸ்கிமோக்கள் | மலாய் நாட்டு மக்கள் |

# 8. தமிழ் நாடு

நீலத் திரைக்கட லோரத்திலே—நின்று
நித்தம் தவம்செய் குமரியெல்லை—வட
மாலவன் குன்றம் இவற்றிடையே—புகழ்
மண்டிக் கிடக்கும் தமிழ்நாடு. 1

கல்வி சிறந்த தமிழ்நாடு—புகழ்க்
கம்பன் பிறந்த தமிழ்நாடு—நல்ல
பல்வித மாயின சாத்திரத்தின்—மணம்
பாரெங்கும் வீசும் தமிழ்நாடு. 2

வள்ளுவன் தன்னை உலகினுக்கே—தந்து
வான்புகழ் கொண்ட தமிழ்நாடு—நெஞ்சை
அள்ளும் சிலப்பதி காரமென்—றோர்மணி
ஆரம் படைத்த தமிழ்நாடு. 3

விண்ணை இடிக்கும் தலையிமயம்—எனும்
வெற்பை இடிக்கும் திறனுடையார்—சமர்
பண்ணிக் கலிங்கத் திருள்கெடுத்தார்—தமிழ்ப்
பார்த்திவர் நின்ற தமிழ்நாடு. 4

—சி. சுப்பிரமணிய பாரதியார்

**கேள்விகள் :**

1. தமிழ் நாட்டின் எல்லைகள் எவை ?

2. தமிழ் நாட்டில் தோன்றிய சிறந்த புலவர்கள் யாவர் ?

3. சிலப்பதிகாரம் என்னும் நூலின் செயலைக் கவிஞர் எவ்வாறு கூறியுள்ளார் ?

4. சிலப்பதிகாரம் யார் இயற்றியது ?

5. வள்ளுவரும் கம்பரும் செய்த நூல்கள் யாவை ?

குறிப்பு :—வடமாலவன்குன்றம்—திருவேங்கடமலை (திருப்பதி), கம்பர் எழுதியது, கம்பராமாயணம். திருவள்ளுவர் எழுதியது, திருக்குறள். சிலப்பதி காரத்தை இயற்றியவர் இளங்கோவடிகள்.

**இலக்கணம் :**

க் முதல் ன் வரையில் உள்ள பதினெட்டு எழுத்துக்களும் மெய் எழுத்துக்கள். அவற்றுள் க், ச், ட், த், ப், ற் என்னும் ஆறும் வல்லின மெய் எனப்படும் ; ங், ஞ், ண், ந், ம், ன் என்னும் ஆறும் மெல்லின மெய் எனப்படும் ; ய், ர், ல், வ், ழ், ள் என்னும் ஆறும் இடையின மெய் எனப்படும்.

எழுத்தறி வித்தவன் இறைவ னாகும்.

மெய்யே பேசினால் மேன்மை அடைவாய்.

இவற்றிலுள்ள வல்லின, மெல்லின, இடையின மெய்களை எடுத்தெழுது.

# 9. உலோகங்கள்

1. நிலத்திலிருந்து கிடைக்கும் பொருள் களுள் **உலோகம்** என்பது ஒரு வகை. உலோ கத்தில் பல பிரிவுகள் உண்டு. அவை **பொன், வெள்ளி, செம்பு, இரும்பு** முதலியவை. இந்த உலோகங்கள் பூமியிலிருந்து வெட்டியெடுக் கப்படுகின்றன. அப்படி வெட்டப்படும் இடத் துக்குச் **சுரங்கம்** என்பது பெயர். அதைக் **கனி** என்றுங் கூறுவதுண்டு. கனியிலிருந்து எடுக்கப்படுவதால் உலோகங்களைக் **கனிஜப் பொருள்கள்** என்பது வழக்கம். உலோகம் ஒவ்வொன்றைப்பற்றியும் சிறிது கூறுவோம்:

2. **தங்கம் :** இதைப் **பொன்** என்றும் புக லலாம். இதன் நிறம் பசுமை கலந்த மஞ்சள். ஆனால், கலப்பில்லாத தங்கம் மஞ்சளைப் பிளந் ததுபோல இருக்கும். மற்ற உலோகங்களைக் காட்டிலும் தங்கம் கனமானது; பளபளப் புடையது; நயமானது; என்றும் குன்றாத ஒளி யுடையது. பொன்னில் துருப்பிடிப்பதில்லை.

3. பொன்னினால் மிக மெல்லிய தகடுக ளும் கம்பிகளும் செய்யலாம். அது சுரங்கத்தி லிருந்து எடுபடும்போது கல்லோடும் மண் ணோடும் கலந்திருக்கும். மொத்தமாகப்

பொடி செய்து பாதரசத்தில் கூட்டுவார்கள். பொன் மாத்திரம் ரசத்தில் ஒட்டிக்கொள்ளும். பின்பு, அதைக் காய்ச்சுவார்கள். அப்போது ரசம் ஆவியாய்ப் போகும். நின்ற பொன் சுத்தமாயிருக்கும்.

4. பொன் அணிகள் செய்யவும், சவரன் என்னும் நாணயம் செய்யவும் உதவுகிறது. பணக்காரர்கள் பாத்திரமும் செய்வார்கள். இந்தியாவில் மைசூரைச் சேர்ந்த கோலாரிலும், ஆந்திர இராச்சியத்தில் அனந்தபுரம் ஜில்லாவிலும் பொன் கிடைக்கின்றது.

5. **வெள்ளி:** வெள்ளி வெண்மை நிறமும் ஒளியும் உடையது. அது பொன்னைவிடச் சிறிது குறைந்த கனமுடையது. அதிலும் துருப்பிடிப்பதில்லை. கலப்பில்லாத வெள்ளி எப்பொழுதும் ஒளி குன்றுவதில்லை. அதைச் சொக்கவெள்ளி என்பது வழக்கம். சுத்தமான வெள்ளி, மிகவும் நயமானது. அதையும் மெல்லிய தகடாகவும் கம்பியாகவும் செய்யலாம். சுரங்கத்திலிருந்து எடுபடும் வெள்ளி ஈயத்துடன் கலந்திருக்கும்; கலப்பின்றிக் கிடைப்பதும் உண்டு.

6. வெள்ளியினால் நகைகளும் பாத்திரங்களும் செய்யலாம். வெள்ளியுடன் சிறிது

தாமிரத்தைக் கலந்து நாணயங்கள் செய்து வந்தார்கள். நம் நாட்டில் ரூபாய், அரை ரூபாய், கால் ரூபாய் ஆகிய நாணயங்கள் முன்பு வெள்ளியால் செய்யப்பட்டவை. வெள்ளி அரைக்கால் ரூபாயும் செய்யப்பட்டிருந்தது.

7. **செம்பு:** இது சிவந்த நிறமுடையது. இதைத் **தாமிரம்** என்றுங் கூறலாம். இதனால் கம்பிகளும் தகடுகளும் செய்யப்படுகின்றன. பாத்திரங்களும் செய்வதுண்டு. இந்த உலோகம் களிம்பு பிடிக்கும். களிம்பு நச்சுத் தன்மை உடையது. ஆதலால், தாமிரப் பாண்டங்களுக்கு ஈயம் பூசுவார்கள். செம்பு சூட்டை விரைவில் ஏற்றுக்கொள்ளும். அதனாற்றான் செப்புப் பாத்திரங்களில் சமையல் செய்வது வழக்கம்.

8. **இரும்பு:** இது சுரங்கத்திலிருந்து எடுக்கப்படும் போது மண், கந்தகம் முதலியவற்றுடன் கூடியிருக்கும். இரும்பில் பல வகை உண்டு. அவை வார்ப்பிரும்பு, வினை இரும்பு, எஃகு என்பவை அவற்றுள் வார்ப்பிரும்பில் நிலக்கரியும் கலந்திருக்கும். அது விரைவில் உருகும்; அப்படியே ஒடியும். வினை இரும்பு அப்படி உருகாது; காய்ச்சினால் மெதுப்படும். எஃகு வளையும்; ஆனாலும், விரைவில் ஒடியாது.

இதனுல் பீரங்கிக் குண்டு, கத்தி, சண்டைக் கப்பல் முதலியன செய்வார்கள். ஆகையால், எஃகிரும்புக்கு விலை அதிகம்.

9. **ஈயம்:** இது சாம்பல் நிறமுள்ளது. இதில் இரு வகையுண்டு. அவை வெள்ளீயம், காரீயம் என்பன. ஈயம் காகிதத்தின்மேல் கருமையாய் எழுதும். தாமிரப் பாத்திரங்கட்கு உட்புறத்தில் ஈயத்தைப் பூசினுல் களிம்பு ஏற்படாது. தனி ஈயத்தாலும் பாண்டங்கள் செய்வதுண்டு. இதனுல் துப்பாக்கி ரவைகளும் செய்கிருர்கள்.

10. **தகரம்:** இது வெண்மையானது; அதிக கனம் இல்லாதது; விரைவிலும், எளிதிலும் உருகுவது. இதைத் தாமிரத்துடன் சேர்த்தால் வெண்கலமாகும். தகரத்தில் துருப் பற்றுவதில்லை. ஆதலால், இரும்புத் தகடுகளின்மீது இதைப் பூசுவார்கள். பாத்திரங்களுக்குக் கலாய் பூசுவதற்கும் இது பயன் படுகிறது.

11. **பித்தளை:** இது ஒரு கலப்பு உலோகம். தாமிரமும் துத்தநாகமும் கலந்ததே பித்தளை. இது பசுமையான மஞ்சள் நிறமுடையது; துருப் பிடியாதது; ஆயினும், தேய்த்துக் கொண்டிருந்தால்தான் ஒளி வீசும். இது திடமான பொருள்; எளிதில் உருகிவிடும். இதனுல்

கம்பிகளும் தகடுகளும் செய்யலாம். பித்தளை யினாலேயே பெரும்பாலும் பாத்திரங்கள் செய்யப்படுகின்றன. பித்தளையும் களிம்பு பிடிக்குந் தன்மையுடையது. ஆகையால், ஈயம் பூசியே அதைச் சமையலுக்குப் பயன்படுத்த வேண்டும்.

12. **வெண்கலம் :** தாமிரம், துத்தநாகம், தகரம், என்னும் மூன்றின் கூட்டுப் பொருளே இது. இது ஒளியில் சிறந்தது. ஓசை மிக்கது ; திடமும் பளுவும் உடையது. இதனால் பாத்தி ரங்கள் செய்யப்படுவதுண்டு. நம்மையும் தவறி அப்பாண்டம் கீழே விழுந்தால், உடனே உடைந்துவிடும்.

**அரும்பதங்கள் :**

| | | |
|---|---|---|
| **உலோகம்** | **தகடு** | **எஃகு** |
| **செம்பு** | **பாதரசம்** | **பீரங்கி** |
| **இரும்பு** | **சவரன்** | **துப்பாக்கி** |
| **ஈயம்** | **நாணயம்** | **துத்தநாகம்** |
| **சுரங்கம்** | **தாமிரம்** | **வெண்கலம்** |
| **கனி** | **களிம்பு** | **வார்ப்பு** |
| **கலப்பு** | **நச்சுத்தன்மை** | **பளு** |
| **குன்றாத** | **கலாய்** | **பாண்டம்** |

**பயிற்சி :**

**(அ) கலப்பில்லாத, துருப்பிடிப்பதில்லை——பதம் பிரி.**

(ஆ) நயமானது, கலந்து, ஒளிரும்—எதிர் மொழி எழுது.

(இ) கனி, வெள்ளி—இரு பொருள் எழுது.

(ஈ) குன்றுத, கலப்பு, நகை, நஞ்சு—தொடரில் அமை.

(உ) கனியிலிருந்து எடுக்கப்படுவதால் உலோகங்களுக்குக் கனிஜப் பொருள் என்பது பெயர்.—தனிநிலைத் தொடர்களாக்கு.

(ஊ) பொன்னைப்பற்றிப் பத்துச் சொற்றொடர்கள் எழுது.

(எ) கோடிட்ட இடத்தை நிரப்பு :—

1. கலப்பில்லாத—மஞ்சளைப்—போல இருக்கும்.
2. பொன்னினுல்——மெல்லிய தகடுகள்——.
3. வெள்ளியினுல்——செய்யலாம்.
4. செம்பு——விரைவில்——.
5. தகரத்தை ——சேர்த்தால்—வெண்கலம்.

**கேள்விகள் :**

1. தங்கம் என்பது எதற்குப் பெயர் ?
2. செப்புப் பாத்திரங்களுக்கு ஈயம் பூசுவது ஏன்?
3. பித்தளையில் கலந்துள்ள உலோகங்கள் எவை ?

**இலக்கணம்:**

உயிர் எழுத்து மெய்யுடன் சேர்ந்தால் உயிர்மெய் எழுத்து, அதாவது உயிர் கூடிய மெய் எழுத்து எனப் படும். க என்னும் உயிர்மெய் எழுத்து அ என்னும் உயிர் கூடிய க் என்னும் மெய்யெழுத்து. அப்படியே 12 உயிரும் 18 மெய்யுடன் சேர்ந்தால், $12 \times 18 = 216$ உயிர்மெய் எழுத்துக்களாகும்.

இரும்பு கருமையான நிறமுடையது.—இதிலுள்ள உயிர்மெய் எழுத்துக்களை மெய் வேறு, உயிர் வேருகப் பிரித்துக் காட்டு.

# 10. வில் வீரன்

1. இராமனைப்பற்றி முன் வகுப்பில் ஒரு கதை படித்தோம் அல்லவா? அவன் சூரிய குல மன்னன். சூரிய குலம் என்பது பல்லாயிர வருஷமாக அரசாண்ட மரபு. அது **ரகு வமிசம்** எனவும் படும். அதில் பிறந்த அனைவரும் அறிவு, ஒழுக்கம், ஆண்மை, கொடை, ஆட்சி முதலியவற்றில் சிறந்திருந்தார்கள். எனினும், அவர்களுள் இராமன் எல்லாவற்றிலும் ஏற்றமுடையவன். அவன் வில் வீரன். ஆகையால், அவனுடைய வீரச் செயல்களுள் சிலவற்றை இங்கே கூறுவோம்:

2. இராமன் இளமையிலேயே எல்லாக் கலைகளையும் கற்றிருந்தான். ஆயினும், வில்வித்தையில் அவனுக்கு மிக்க திறமையுண்டு. இராமன் எதை எய்வதாயினும், ஒரே அம்பு தான் விடுவான். அந்த அம்பு குறி தவறாமல் அவன் எண்ணியதை ஈடேற்றிவிடும். தொலைவில் இருந்து விளையாட்டுக்கு அடித்தாலும், அவனுடைய இலக்குத் தவறுதல் இல்லை.

3. இராமனை **விசுவாமித்திரர்** தம்மோடு அழைத்துச் சென்றார்; அவனுடன் தம்பி இலக்குமணனையும் அழைத்துச் சென்

றூர். அவர் செய்யும் யாகத்தை அவுணர்கள் அழிக்கவே, அவர்களைப் போக்கவும், யாகத் தைக் காக்கவும், இராமனையும் இலக்குமணனை யும் அழைத்துச் சென்றூர்.

4. போகும் வழியிலேயே **தாடகை** என் னும் அரக்கி ஒருத்தி வந்தாள். அவள் மிகவும் கொடியவள்; மிகுந்த பலம் உடையவள். அவளை இராமன் அம்பினுல் அடித்தான். உடனே அத்தீயவள் பெரிய மலை சாய்ந்தது போல விழுந்து இறந்தாள். அவளுக்கு இரண்டு ஆண் பிள்ளைகள் உண்டு. அவர்கள் **சுபாகு, மாரீசன்** என்பவர்கள். தாடகை இறந்ததைக் கேட்டு அவர்கள் போருக்கு வந்தார்கள். இராமன் யாகசாலையிலேயே அவர்களோடு போர் புரிந்தான். அவர்களுள் சுபாகு என்பவன் இறந்தான். மாரீசன் இராம பாணத்துக்குப் பயந்து ஓடி ஒளிந்து கொண்டான்.

5. தாடகை முதலியவர்களின் தொந்தரவு ஒழிந்ததனுல் யாகம் செம்மையாக முடிந்தது. பிறகு விசுவாமித்திரர், இராமனையும் இலக்கு மணனையும் மிதிலை நகருக்கு அழைத்துச் சென்றூர். அந்நகரின் அரசர் **ஜனகர்** என் பவர். அவர் அரண்மனையில் ஒரு பெரிய வில் இருந்தது. அந்த வில்லை எடுத்து வளைப்ப

வளைச் சீதை மணப்பாள் என்ற ஏற்பாட்டுடன் சுயவரம் நடந்தது. எப்படிப்பட்டவர்களாலும் அவ்வில்லை அசைக்க முடியவில்லை.



ஆனால், அவ்வில்லை இராமன் சுலபமாய் எடுத்து வளைத்தான். வில் முறிந்துவிட்டது. முறைமைப்படி சீதைக்கும் இராமனுக்கும் திருமணம் நிகழ்ந்தது.

6. மணக்கோலத்துடன் இராமன் அயோத்திக்குத் திரும்பினன். வழியில் ஒரு வீரர் எதிர்த்தார். அவர் பெயர் **பரசுராமர்.** அவர் பெரிய தவசி. போரில் அவருக்குச் சமானம் அக்காலத்தில் யாரும் இல்லை. அவரைக் கண்டால் அரசர் யாவரும் அலறியோடுவர். அப்படிப்பட்ட வீரரை, இராமன் எதிர்த்

தான்; ஒரு கணை தொடுத்தான். பரசுராமர் தோல்வியுற்றார். "இனி நான் போருக்கு வருவதில்லை. என்னை விட்டுவிடு!" என்றார். அவரை இராமன் மன்னித்துவிட்டுச் சென்றான்.

7. பின்பு, இராமன் பதினான்கு ஆண்டுகள் காடு சென்றான். அங்கேயும் அவனுக்குத் துன்பங்கள் பல நேர்ந்தன. முன்னே பயந்து ஓடி மறைந்த மாரீசன் ஒரு மானாக வடிவமெடுத்து வந்தான். அவனை இராமன் அதிக தூரம் துரத்திச் சென்று, அம்பினால் அடித்தான். மாரீசன் ஆவி இழந்தான். இலங்கைக்கு அரசனான இராவணன், சீதையை எடுத்துச் சென்று சிறை வைத்தான்.

8. பிறகு, இராமன் சீதையைத் தேடிச் செல்லும் போது கிஷ்கிந்தைக்குப் போனான். அங்கே ஏழு மரங்கள் இருந்தன. அம்மரங்கள் ஏழையும் இராமன் ஒரே அம்பினால் தொளை செய்து காட்டினான். அனுமானது நட்பு இராமனுக்குக் கிடைத்தது. அந்நகருக்கு அரசன் வாலி. அவன் பெரிய வீரன். தேவர்களும் அரக்கர்களுங்கூடப் பாற்கடலைக் கடைய முடியாமல் இளைத்த போது, வாலி ஒருவனே கடைந்தான். பத்துத் தலைகளையுடைய இராவணன் வாலிக்கு ஒரு

துரும்பு. அப்பபடிப்பட்ட வாலியை இராமன் ஒரே அம்பினுல் அடித்துக் கொன்ருன்.

9. பின்பு, இராமன் வானர சேனையுடன் இலங்கைக்குச் சென்ருன். அங்கே தன் பகைவனுகிய இராவணனேடு போர் செய்தான். அச் சண்டையில் இராமன் அரக்கர்களை அடித்து மடித்தான்; முடிவாகப் பத்துத் தலைகளையுடைய இராவணனுடைய ஆவியையும் முடித்தான்.

10. இவ்வளவு வீரத் தன்மையுடைய இராமன் கையில் இருந்த வில்லுக்குக் **கோதண்டம்** என்பது பெயர். அதைக் கையில் பிடித்திருந்ததால், அவனுக்குக் **கோதண்டராமன்** என்ற பெயர் வழங்குகிறது. அவன் வீரனுகையால், **வீரராமன்** என்றும், எப்பொழுதும் ஜயமே பெற்றவனுகையால் **ஜயராமன்** என்றும் அவனைக் கூறுவார்கள். இராமனுடைய வீரத்தையும் சிறந்த ஒழுக்கத்தையும் எல்லோரும் புகழ்கிருர்கள்.

**அருஞ்பதங்கள் :**

| | | |
|---|---|---|
| **பல்லாயிரம்** | **பாணம்** | **நேர்ந்தன** |
| **கலைகள்** | **தீயவள்** | **துரத்தி** |
| **ஈடேற்றி** | **அரக்கி** | **தொளை** |
| **உண்டைவில்** | **அவுணர்** | **சமானம்** |
| **பாங்கி** | **யாகசாலை** | **பாற்கடல்** |
| **தொலைவில்** | **செம்மையாக** | **கடைய** |
| **இலக்கு** | **எதிர்த்தார்** | **ஆவி** |

### பயிற்சி :

(அ) பல்லாயிரம், எல்லாவற்றிலும், தம்பியை யும்—பதம் பிரி.

(ஆ) கொடியவள், பொர, செம்மையாக—பொருள் எழுது.

(இ) சண்டையைக் குறிக்கும் சில மொழிகளை எழுது.

(ஈ) ஏற்றம்—இரு பொருள் எழுது.

(உ) தொலைக்க, தொளைக்க—பொருள் எழுது.

(ஊ) குறி, பாங்கி, ஆவி, கோதண்டம்—தொட ரில் அமைத்து எழுது.

(எ) பரசுராமனைப்பற்றி ஐந்து சொற்றொடர் எழுது.

(ஏ) இராமன் வீரத்தில் மூன்று எழுது.

(ஐ) கோடிட்ட இடத்தை நிரப்பு :—

1. ——இளமையிலேயே உண்டை—பழகினான்,

2. தாடகைக்கு——என——உண்டு.

3. மாரீசன்——வடிவம்——

### கேள்விகள் :

1. இராமன் எந்தக் குலத்து மன்னன் ?

2. இராம பாணம் எப்படிப்பட்டது ?

3. தாடகை எப்படி விழுந்தாள் ?

4. சீதையின் சுயம்வரத்தில் வில் வளைக்கச் செய் தது ஏன் ?

5. வாலி எப்படிப்பட்டவன் ?

**இலக்கணம்:**

இராமன், அயோத்தி, நாள். கை. ஆண்மை, தவறு தல் இவைகள் பெயர்ச்சொற்கள்.

இராமன் என்பது பொருட்பெயர்.

அயோத்தி என்பது இடப்பெயர்.

நாள் என்பது காலப்பெயர்.

கை என்பது சினைப்பெயர்.

ஆண்மை என்பது குணப்பெயர்.

தவறுதல் என்பது தொழிற்பெயர்.

சினையை உறுப்பு என்றும் குணத்தைப் பண்பு என்றும் கூறலாம்.

இப்பாடத்திலிருந்து ஒவ்வொரு பெயருக்கும் மும் மூன்று உதாரணங்கள் காட்டு.

மனிதன், யானை இரண்டும் பொருட்பெயர்கள். என்றாலும், மனிதன் வந்தான் என்றும், யானை வந்தது என்றும் கூறுகிறோம், ஏன்? மனிதன் உயர்ந்த குலம். யானை உயர்வு அல்லாத குலம், உயர்ந்த குலப் பொருளை உயர்திணைப் பொருள் என்றும், உயர்வு அல்லாத குலப் பொருளை (அல்திணை) அஃறிணைப் பொருள் என்றும் கூறுவது வழக்கம். திணை - குலம்.

# 11. கதைப் படம்




படம் பார்த்துக் கதை சொல் ; எழுது.

# 12. சூழ்ச்சி

ஒரு குளக்கரையில் பெரிய ஆலமரம் ஒன்றிருந்தது. அதில் பல கொக்குகள் கூடு கட்டி வசித்திருந்தன. அவை குளத்திலுள்ள மீன்களைப் பற்றித் தின்று காலம் கழித்தன. ஒரு கொக்கு மச்சங்களை மிகத் தின்று கொழுத்துப் பருத்திருந்தது. அது ஒரு நாள் குளக்கரையில் இருந்தபோது ஒரு நண்டைப் பார்த்தது. அந்நண்டு மிகப் பெரியதாயிருந்தது. கொக்கு அதை எப்படியாவது புசிக்க வேண்டும் என்று ஆசை கொண்டது.

கொக்கு, மறுநாள் வழக்கப்படி குளக்கரைக்கு வந்தது; மிகுந்த வருத்தத்தோடு



தலையைத் தொங்கவிட்டுக்கொண்டிருந்தது; காலை முதல் யாதோர் உணவையும் உட்கொள்ளவில்லை; கண்களையும் திறக்கவில்லை: அசையாமல் ஒரே நிலையில் இருந்தது. கொக்கின் நிலைமையைக் கண்டது நண்டு. அது அதன் எதிரில் வந்து, "கொக்கே, நீ ஏன்

இன்று இவ்வாறு வாடியிருக்கிறாய்? வந்த துன்பமென்ன? காலை முதல் கண்மூடி, முகங் கவிழ்ந்து, மனம் கலங்கியிருக்கிறாயே! இது வரையில் ஒருநாளும் நீ இப்படி இருந்ததில்லை யே!'' என வினவியது.

**கொக்கு:** — எனக்கொன்றும் துன்ப மில்லை. அப்படி எனக்குத் துன்பம் வந்தா லும் நான் வருந்தமாட்டேன்.

**நண்டு:**—அப்படியானால் உன் உறவின ருக்கு ஏதேனும் துயரம் உண்டோ?

**கொக்கு:**—அப்படியும் இல்லை.

**நண்டு:**—மற்று யாருக்குத்தான் துன்பம் விளைந்தது?

**கொக்கு.**—அதை நீ அறிந்தால் அதிக துக்கப்படுவாய். எனக்குத் தெரிந்தது என் மனத்தோடிருக்கட்டும்.

**நண்டு:**—எனக்கு அதிக துக்கந் தருவ தாகிய அச்செய்தியை நான் அறியாதிருக்க லாமா?

**கொக்கு:**—அது அறிய வேண்டுவதுதான்; ஆனால், ஆபத்து வருங் காலத்தில் அஞ்சாமல் அதிலிருந்து தப்பிக்கும் வழியை நாடும் திடம் உனக்கிருந்தால் அறியலாம்.

**நண்டு** :—அப்படியானல் சொல்லு; நான் அஞ்சேன். அன்றியும், எனக்கு உன் உதவி இருப்பதால் கொஞ்சமும் அஞ்சேன்.

**கொக்கு** :—இன்று விடியற்காலையில் சில செம்படவர்கள் இங்கே வந்தார்கள். அவர்கள் பேசியதைக் கேட்டுத்தான் நான் பெரிதும் வருந்துகிறேன்.

**நண்டு** :—அவர்கள் என்ன பேசிக்கொண்டார்கள்?

**கொக்கு** :—"எல்லாக் குளம் குட்டைகளிலும் உள்ள மச்சங்களைப் பிடித்துவிட்டோம். இனி இது ஒன்றுதான் நின்றது. இன்றிரவு இதில் வலை வீச வேண்டும்," என்ருர்கள்.



**நண்டு**:—ஐயோ! அப்படியா! உண்மையாகவா!

**கொக்கு** :—என் சொல்லில் உனக்கு நம்பிக்கை இல்லையா?

**நண்டு** :—ஆனல், நண்பா, இனி அதற்கு என்ன செய்வது?

**கொக்கு** :—என்ன செய்வதா? நீதான் யோசித்துச் சொல்ல வேண்டும்?

**நண்டு:**—எனக்கு ஒன்றும் தோன்ற வில்லை. நீயே ஒரு தந்திரம் கூறு.

**கொக்கு:**—நான் சொல்லுகிறபடி நீ கேட்பாய்; மற்ற மீன்களும் நண்டுகளும் கேட்குமா?

**நண்டு:**—நான் கேட்கச் செய்கிறேன்.

**கொக்கு:**—அப்படிச் செய்தால் நன்மை தான். எல்லாக் குளங்களிலும் குட்டைகளி லும் செம்படவர் வேட்டையாடிவிட்டனர். ஆகையால், இங்கே உள்ளவர் அனைவரும் வேறொரு குளத்துக்குக் குடியேற வேண்டும், அதற்காக நான் முன்னமே ஒரு குளம் கண்டு வந்தேன்.

**நண்டு:**—ஆனால் சரி, அங்கே குடி போக லாம்.

அதன்பின் இரண்டும் பிரிந்தன. நண்டு சென்று எல்லா மீன்களையும் மற்ற நண்டு களையும் கூட்டியது; வரப்போகும் துன்பத் தைக் கூறியது; இனிச் செய்ய வேண்டுவ தைக் கூறிற்று. அவைகளும் கொக்குக் கூறிய யுத்தியை ஒப்புக்கொண்டன. முடிவில் கொக்கே அவைகளைக் கொண்டு போய்ச் சேர்க்க வேண்டும் என்ற தீர்மானமும் ஏற்

பட்டது. அதையறிந்த கொக்குக்கு எல்லை கடந்த ஆனந்தம் உண்டாயிற்று

ஏற்பாட்டின்படி, கொக்கு மீன்களை அலகினால் கௌவிச் செல்லத் தொடங்கியது.



போகும் வழியில் அவற்றைக் கொன்று வயிறு கொண்ட மட்டில் அருந்தியது; எஞ்சியவைகளை ஒரு பாறையின்மேல் உலர்த்தியது. கடைசியாக நண்டின் முறை வந்தது. கொக்கு நண்டைத் தன் வாயால் கௌவிக்கொண்டு சென்றது.போகும்வழியில் மீன்களின் எலும்புகள் சிந்திக் கிடப்பதை நண்டு கண்டது; ஐயம் கொண்டது. உடனே கொக்கின் வஞ்சகத்தை உணர்ந்தது. "சரி; கொக்கு நம் குளத்து மீன்களைக் கொன்று தீர்த்தது; நண்டுகளையும் சாலப் புசித்தது; நம்மையும் கொல்ல நயந்திருக்கிறது. ஆயினும், நாம் முந்திக்கொள்ளுதல் வேண்டும்; எப்படியும் இன்னும் சிறிது நேரத்தில் இதன் உயிரைப் போக்கவேண்டும்" என நண்டு நினைத்துவிட்டது.

உடனே நண்டு தனது முன்னங்காலின்




கவைகளினுல் கொக்கின் கழுத்தை அழுத்திப் பிடித்தது. கொக்கின் கழுத்து இரு துண்டு பட்டது. தலே வேறு, முண்டம் வேருக விழுந்தன. நண்டு உயிர் பிழைத்துச் சென்று, தனது இருப்பிடம் அடைந்தது. நண்டு சுகம் பெற்றது அதனுடைய சூழ்ச்சியினுல் அல்லவா ?

**அரும்பதங்கள் :**

| | | |
|---|---|---|
| **மச்சம்** | **எல்லே** | **நயந்து** |
| **கவிழ்ந்து** | **ஆனந்தம்** | **சால** |
| **தப்பிக்கும்** | **கௌவி** | **முந்தி** |
| **நாடும்** | **எஞ்சிய** | **கவை** |
| **செம்படவர்** | **பாறை** | **முண்டம்** |
| **வலே** | **சிந்தி** | **யுத்தி** |

**பயிற்சி :**

(அ) இருப்பிடம், எப்படியாவது, இன்றிரவு—பதம் பிரி.

(ஆ) சூழ்ச்சி, மச்சம், வஞ்சகம், சுவை—பொருள் எழுது.

(இ) முந்தி—எதிர்மொழி எழுது.

(ஈ) சூழ்ச்சி என்பதற்கு வேறு மொழி எழுது.

(உ) நாடு—இரு பொருள் எழுது.

(ஊ) நாடும், கௌவி, கவை, முண்டம்—தொடரில் அமை.

(எ) நண்டு செய்த சூழ்ச்சியைப் பற்றி ஐந்து வரிகள் எழுது.

(ஏ) போகும் வழியில் சிந்திக்கிடந்த எலும்புகளை நண்டு கண்டு ஐயங்கொண்டு, கொக்கின் வஞ்சகத்தை அறிந்தது—தனித்தனி தொடராகப் பிரித்து எழுது.

தொடரை முடி :—

1. கொக்குக் குளக்கரையில் வாடி ——.
2. கொக்கும் நண்டும் பேசிக் ——.
8. கொக்கு மீன்களை அலகினுல் கௌவிச் ——,
4. நண்டு உயிர் பிழைத்துப் பழையவிடம் ——.

கேள்விகள் :

1. கொக்கு எப்படி நடித்தது ?
2, எதனுல் நண்டு பயப்பட்டது ?
3. கொக்கு மச்சங்களை என்ன செய்தது ?
4. இக்கதையில் உள்ள சூழ்ச்சிகள் எவை ?

இலக்கணம் :

பால்:

திணையில் சில பிரிவுகள் உண்டு. அந்தப் பிரிவுக்குப் பால் என்பது பெயர். உயர்திணைப் பிரிவு ஆண் பால், பெண் பால், பலர் பால், என மூவகைப்படும்.

அஃறிணைப் பிரிவு ஒன்றன் பால், பலவின் பால் என இரு வகைப்படும்.

முருகன்—இச்சொல் ஆணைக் குறிப்பதால், ஆண் பால்.

| | | |
|---|---|---|
| வள்ளி | ,, | பெண்ணைக் குறிப்பதால் பெண் பால். |
| மனிதர் | ,, | ஆண், பெண் கூடிய பலரைக் குறிப்பதால் பலர் பால். (அஃறிணையில் ஆண், பெண் என்ற பிரிவு இல்லை.) |
| கொக்கு | ,, | ஒன்றைக் குறிப்பதால் ஒன்றன் பால். |
| கொக்குகள் | ,, | பலவற்றைக் குறிப்பதால் பலவின் பால். |

இப்பாடத்திலிருந்து ஒவ்வொரு பாலுக்கும் மும்மூன்று பெயர்கள் எடுத்து எழுது.

**எண் :**

பெயர்ச்சொல், ஒன்றைக் குறித்தால் **ஒருமைப் பெயர்** என்றும், ஒன்றுக்கு மேற்பட்ட பலவற்றைக் குறித்தால் **பன்மைப் பெயர்** என்றும் கூறுகிறோம்.

**மனிதன், மாடு, வீடு**—ஒருமைப் பெயர்கள்.

**மனிதர், மாடுகள், வீடுகள்**—பன்மைப் பெயர்கள்.

இப்பாடத்திலிருந்து ஒருமைப் பெயர் நான்கும், பன்மைப் பெயர் மூன்றும் எடுத்தெழுது.

**கேள்விகள் :**

1. பெயர் வகை எத்தனை? எவை?
2. திணை வகை எத்தனை? எவை?
3. பால் வகை எத்தனை? எவை?
4. எண் வகை எத்தனை? எவை?

மேற்கண்ட வகை ஒவ்வொன்றுக்கும் ஒவ்வோர் உதாரணம் எழுது.



# 13. பாரி

1. தமிழ் வழங்கும் நாடு தமிழ் நாடு. இதில் மூன்று வகையான வள்ளல்கள் இருந்தார்கள். அவர்கள் முதல் எழு வள்ளல்கள், இடை எழு வள்ளல்கள், கடை எழு வள்ளல்கள் எனப்படுவர். முன் வகுப்புக்களில் சில வள்ளல்களைப் பற்றிப் படித்தீர்களல்லவா? இப்பாடமும் ஒரு வள்ளலைப் பற்றியது. அவ்வள்ளல் **பாரி** என்பவன். பாரி கடை எழு வள்ளல்களுள் ஒருவன்.

2. பாரி ஒரு சிற்றரசன். அவன் மலை நாட்டுக்கு அரசன். அவனுடைய நாட்டுக்குப்

**பறம்பு நாடு** என்பது பெயர். பறம்பு நாடு மிகச் சிறியதுதான். அது முந்நூறு ஊர்களை உடையது. சிறிய நாட்டு அரசனுயினும், பாரி பெரிய புகழ் படைத்தவனுய் இருந்தான். அவனுக்கு எப்படிப் புகழ் கிடைத்தது? வள்ளல்களின் இயல்புதான் உங்களுக்குத் தெரியுமே! வள்ளல்கள் வந்தவர்களுக்கு அள்ளி அள்ளி வழங்குவார்களல்லவா? அதனுலே தான் அரசனுகிய பாரி அவ்வளவு புகழ் பெற்ருன். அது மாத்திரமா! பாரி எப்போதும் இனிமையாகப் பேசுவான்; இன்முகமே உடையவன். அவன் வாயில் அவனை மறந்தும் வன்சொல் வருவதில்லை.

3. பாரியின் ஈகைக் குணத்தைக் கூறும் போது 'கொடை மடம் உடையவன்' என்பது வழக்கம். ஏன் அப்படி உரைக்க வேண்டும் என்கிறீர்களோ? அவன் கொடுக்கும் வகையில் அறியாமையை உடையவன். யாருக்கு, என்ன, எவ்வளவு, எப்பொழுது, எங்கே என்று கவனியாமல் கொடுப்பான்; பசி என்று வந்தவர்களுக்குப் பறியும் பரியும் வழங்குவான்; உடை என்று வந்தவர்களுக்கு ஊர் பல தருவான்; உணவு என்று வந்தவர்களுக்கு ஊர்தியும் ஈவான்; பாடி வந்தவர்களுக்குப் பொன்னைக் கோடி கோடியாகக்

கொடுப்பான்; வாடி வந்தவர்களுடன் கூடி உண்பான். இரவலர்களையே உறவினர்களாகக் கருதுவான். நாவலர்களுக்கு நல்ல களிறும் பிடியும் கணக்கின்றித் தருவான்.

4. மற்றொரு நிகழ்ச்சியை இங்கே கூறுவோம்: பாரி ஒரு முறை வெளியில் சென்றான். அவன் அப்பொழுது தேரில் ஏறிச் சென்றான். சென்றவன் கானாறு, கான் குளம், வனச்சோலை, மலை, குன்று, திட்டு, திடர், மேடு, பள்ளம் முதலிய இயற்கை எழிலைக் கண்டான். தன் குடிகளையும், அவர்கள் உறையும் ஊர்களையும், அவற்றையடுத்த மலைச் சாரல்களையும் கண்டு களித்தான். குறிஞ்சி என்பது குன்றிடை நாடு. அங்கே மலை மல்லிகையும் முல்லையும் மட்டின்றிச் செழித்திருக்கும். அவ்விடத்தில் அரசன் ஒரு முல்லைக் கொடியைக் கண்டான்.

5. அந்த முல்லைக்கொடி தனியே படர்ந்திருந்தது. ஆயினும், அது வளப்பத்தில் குறையவில்லை; செழித்துப் படர்ந்திருந்தது. அதில் முகையும் அலரும் அளவின்றி நிறைந்திருந்தன. ஆனால், அது கொள்கொம்பின்றி இருந்தது; காற்றினால் அலைந்துகொண்டிருந்தது. அதைக் கண்ட பாரியின் மனம் பதைத்தது. ‘ஐயோ! இப்பசுங்கொடிக்குப்

பற்றுக்கொம்பில்லையே! இது வருந்துகிறதே!' என்று இரக்கங்கொண்டான்; அது படர்வதற்கு வழி தேடினுன். என்ன செய்தான் தெரியுமா? தான் ஏறி வந்த தேரை அதன் அருகில் நிறுத்தினுன். தரையில் தவழ்ந்திருந்த பைங்கொடியை எடுத்துத் தேரில் விட்டான்.

6. முல்லைக்கு ஆதரவாகத் தேரை நிறுத்தி விட்டு, பாரி நடந்தே சென்றுன். அவன் கால்களுங் கடுத்தன. பாதங்களும் சிவந்தன. ஆயினும், அது அவனுக்கு வருத்தமாகத் தோன்றவில்லை; கொடிக்கு உதவி செய்ததை எண்ணி எண்ணி மகிழ்வெய்தினுன். 'இனி, இக்கொடி நன்முகப் படரும்; காற்றினுல் வருந்தாது,' என்பதையே கண்ணியமாகக் கருதினுன். இப்படிப்பட்டவனுடைய கீர்த்தி எங்கும் பரவிற்று என்பதில் என்ன புதுமை இருக்கிறது?

7. பாரி கொடையில் சிறந்து விளங்கியது போலவே படையிலும் திகழ்ந்தான். போரில் அவனை வெல்ல எவராலும் இயலாது. வீரமும், தீரமும், நெஞ்சீரமும் ஒருங்கே அமையப்பெற்ற பாரியைப் பல புலவர்கள் நாடிச் செல்வதுண்டு. செம்மலாகிய பாரி சென்றவர்க்கு வறுமை தீரச் செல்வமீவான். சான்ருேர்க்குக் கொடுத்தவன் பெயரை மூவுலகும்

அறியுமல்லவா? ஆகையால், அவனைப்பற்றி யாரும் அறிந்தார்கள்; முடி மன்னர்களாகிய சேர சோழ பாண்டியரும் கேள்விப்பட்டார்கள். முடியுடைய வேந்தர்களைக்காட்டிலும் குறுநில மன்னன் மிக்க புகழ் கொண்டானே என்ற எண்ணத்தால் பொருமை கொண்டார்கள்.

8. பொருமையுடையவர்கள் சிலர் பாரியின்மீது பகை கொண்டார்கள். அவர்களில் மூவேந்தரும் ஒன்றுகூடிப் பாரியை எதிர்க்கத் தலைப்பட்டனர். ஆயினும், அவனை வெல்ல அவர்களால் ஆகவில்லை; போரிலே பின்னடையாதவன் பாரி. ஆதலால், அவன் தோல்வி அடைவானோ? மூவேந்தரும் அவன் எதிர் நின்று போர் செய்ய இயலாது பின்னிட்டனர்.

9. ஆனால், முடிவில் பொருமை கொண்ட மூவேந்தரும் வஞ்சனையாகப் பாரியைக் கொன்றார்கள். பாரியின் உடல் அழிந்தும் புகழ் நிலைத்திருக்கிறது. அவனைப்பற்றிக் **கபிலர்** என்பவர் பாடியிருக்கிறார். **சுந்தரமூர்த்தி** நாயனாரும் தமது தேவாரத்தில் பாரியைப் பற்றிக் கூறியிருக்கிறார். அவர் சொல்லிலிருந்து பாரியின் கொடைத்திறம் விளங்கும்.

அரும்பதங்கள் ;

| | | |
|---|---|---|
| சிற்றரசன் | களிறு | முகை |
| இன்முகம் | பிடி | பைங்கொடி |
| வன்சொல் | கானாறு | ஆதரவு |
| மடம் | திட்டு | கடுத்தன |
| பறி | திடர் | பற்றுக்கோடு |
| பரி | எழில் | அலர் |
| ஊர்தி | குறிஞ்சி | கண்ணியம் |
| இரவலர் | குன்றிடை நாடு | ஈரம் |
| நாவலர் | வளப்பம் | செம்மல் |

பயிற்சி :

(அ) சிற்றரசன், புகழ்—எதிர்ப்பதம் எழுது.

(ஆ) புகழ் என்பதைக் குறிக்கும் வேறு சில மொழி கூறு.

(இ) பறி, பரி—பொருள் வேறுபாடு காட்டு.

(ஈ) வள்ளல், ஊர்தி, இரவலர், ஆதரவு—பொருள் எழுது.

(உ) மகிழ்வெய்தினன், நெஞ்சீரம், மூவேந்தர்—பதம் பிரித்துக் காட்டு.

(ஊ) தனி வாக்கியங்களாகப் பிரி :—

பாரியின் புகழ் எங்கும் பரவியதை மூவேந்தரும் அறிந்து, மிகுந்த பொறாமை கொண்டு, பெரும்படையுடன் சென்று, போர் தொடங்கினர்கள்.

(எ) கீழுள்ள மொழிகளைத் தொடரில் அமை :—

அள்ளி அள்ளி, நிகழ்ச்சி, தவழ்ந்தது.

(ஏ) பாரியின் குணத்தைப்பற்றி ஐந்து சொற்றொடர்கள் எழுது.

(ஐ) கோடிட்ட இடத்தை நிரப்பு :—

பாரி கடையெழு ——— ஒருவன்.

பசி என்று வந்தவர்களுக்கு——வழங்குவான்

குறிஞ்சி என்பது——— நாடு

மூவேந்தரும்———பாரியைக் கொன்றார்கள்.

**கேள்விகள் :**

1. பாரியின் நாடு எது ?

2. வள்ளல்களின் உள்ளம் எப்படிப்பட்டது ?

3. பாரிக்கும் மூவேந்தருக்கும் ஏன் பகை ஏற்பட்டது ?

4. பாரி கொடை மடம் உடையவன் என்பதை விளக்கும் நிகழ்ச்சி எது ?

5. மூவேந்தர்கள் பாரியை எப்படி வென்றார்கள் ?

**இலக்கணம் :**

அம்மா என்னும் மொழியில் உள்ள அ உயிரெழுத்து, ம் மெய்யெழுத்து, மா உயிர்மெய்யெழுத்து, அஃது என்பதில் மூன்று புள்ளி வடிவமாக உள்ள ஃ என்பது ஆய்த எழுத்து. தமிழ் மொழில் உயிரெழுத்து, மெய் எழுத்து, உயிர்மெய்யெழுத்து, ஆய்தவெழுத்து என நான்கு வகை எழுத்துக்களுண்டு.

**பாரியின் கையில் எஃகினால் ஆன வேல் உண்டு**—இச் சொற்றொடரில் உள்ள எழுத்துக்களுள் ஒவ்வொன்றும் இன்ன இன்ன எழுத்து என்று சொல்லு.



# 14. தெய்வத் திருவள்ளுவர்

1. வள்ளுவர் செந்தமிழ் வேதம்—இது
மானிடர்க் கெல்லாம் பொதுமறை
யாகும்
உள்ளத்தில் ஒன்றிஎல் லாரும்—இதை
ஓதி ஒருகுல மாகநாம் வாழ்வோம்.
(வள்)

2. சாதி மதபேதம் இல்லை—தூய
சன்மார்க்க சாதனம் சாற்றும் குறளே
மேதினி எல்லாம் பயின்றால்—மிக
மேன்மையாய் வாழலாம் மானிடர்
எல்லாம். (வள்)

3. அன்பும் அறமும் பொருளும்—வீர
ஆற்றலும் காதலும் போற்றிப்
பொலியும்

இன்பத்தி லேஇரு பாலர்—கூடி
இல்லறம் செய்திட நல்வழி காட்டும்.
(வள்)

4. ஒப்புயர் வற்ற தமிழர்—பெற்ற
ஒப்புயர் வற்ற உயர்பெரு வேதம்
முப்பாலை அள்ளிக் குடிப்போம்—எங்கள்
முத்தமி ழுக்கு ஜெயமுர சடிப்போம்.
(வள்.)

—யோகி. சுத்தானந்த பாரதியார்

குறிப்பு :—திருக்குறளுக்குப் பொதுமறை, முப்பால் என்பன வேறு பெயர்கள்.

ஒன்றி — பொருந்தி
மேதினி — பூமி
சன்மார்க்கம் — நல்வழி
சாற்றும் — கூறும்
ஆற்றல் — வலிமை
பொலியும் — விளங்கும்
இருபாலர் — ஆடவர் பெண்டிர்
இல்லறம் — மனைவியும் கணவனுமாய் வாழ்தல்.
ஓதி — படித்து
தூய — பரிசுத்தம்
சாதனம் — கருவி
அறம் — தருமம்
காதல் — அன்பு

பயிற்சி :

1. குறள் நூலைப் படித்தலால் விளையும் நன்மை என்ன ?
2. குறளுக்குரிய வேறு பெயர்கள் இரண்டு கூறு.

# 15. முத்து

1. முத்து என்பது நவரத்தினங்களுள் ஒன்று. இது தவள நிறமும், உருண்டை உருவமும், பளபளப்பான ஒளியும் உடையது. இச்சிறந்த பொருள் அளவிடப்படாத மிக்க விலையுள்ளது; இழிவான இப்பியின் அகட்டில் பிறக்கிறது.

2. இப்பி என்பது கடினமாகிய கிளிஞ்சிலுக்குள் கொழுகொழுத்து மெத்து மெத்தென்றிருக்குந் தசை மேனியுடைய ஓர் உயிர்ப் பொருள். அது பார்வைக்கு அழகுடையதன்று. இப்பியின் பிறவியே வியப்பானது. அது இளம்பருவத்தில் நத்தை போன்ற வழுவழுத்த உடலுடன், கடல் நீரின்மீது மிதந்து உலவிக்கொண்டிருக்கும். அப்போது, அதன் உடலில் மேல் மூடியாகிய கிளிஞ்சில் இராது. வயதேற வயதேற, விரைவாகக் கிளிஞ்சில் உண்டாகும். கிளிஞ்சில் மூடவுந் திறக்கவுங் கூடியபடி, பிளவுபட்டு இரு பிரிவாய் அமைந்திருக்கும். அச்சமயத்தில் இப்பி, நீரில் மிதக்க வருந்தும்; கிளிஞ்சிலின் கனத்தால் நீரில் மூழ்கித் தரைக்குச் செல்லும்.

3. தரை மட்டத்திற்குப் போன இப்பி, அங்குள்ள பறைகளுள் ஒன்றைத் தேடி

ஒட்டிக்கொள்ளும். உணவு வேண்டுமே! அதற்காகத் தன்னை மூடியுள்ள கிளிஞ்சிலைத் திறந்து வைக்கும். அப்போது, அதில் நீர் புகுமல்லவா? அதனோடு சில சிறு பூச்சி புழுக்களும் நுழையும். அவற்றை இப்பி தின்று வளரும். சிற்றுயிர்களும் அறிவுத் திறமையுடையன என்பது இதனால் தெரிகிற தல்லவா? திறந்த கிளிஞ்சிலோட்டில் நீர் நுழையும்போது, சிறு மணல், மீன் முட்டை முதலியனவும் நுழைவது உண்டு. அவை இப்பியின் உடலோடு ஒட்டிக்கொள்ளும். பின்பு, இப்பி கிளிஞ்சிலை மூடும்போது, மணலும் முட்டையும் உடலில் உறுத்தும். அதனால் இப்பி படும் பாடு கொஞ்சமன்று.

4. வெகுநேரம் இவ்விதம் கஷ்டப்படும் இப்பி, தன் உடலை உறுத்தும் மணலை ஒரு வகைப் பசையால் மூடும். அப்பசை இப்பி யின் உடலிலிருந்தே நீர் போலச் சுரக்கும். அதைச் சுற்றி மூடிய பசை, நாளடைவில் உறைந்து கட்டியாகும். உறைந்த அப்பசை, பளிங்குபோன்று ஒளிரும். இங்ஙனமே தின மும் நீர் சுரப்பதும், மூடுவதும், இறுகுவதும் ஆகிய தொழில் நிகழும். இவ்விதம் அமையும் பசை முடிவில் உருண்டு திரண்டு ஒளியுள்ள ஒரு முத்தாகும்.

5. இப்படிப் பாறையில் கிடக்கும் இப்பிகளை முத்துக்குளிப்பவர்கள் வாரிச் செல்வார்கள். கரையை அடைந்தவுடன் கிளிஞ்சில்களை உடைத்துப் பார்ப்பார்கள். சிலவற்றுக்குள் முத்துக்கள் தேறி இருக்கும். சிலவற்றில் சின்னஞ்சிறு முத்துக்கள் தேருமல் இருக்கும். சில ஒன்றுமின்றியும் இருக்கும். எடுபடும் முத்துக்களின் தகுதிக்கேற்றபடி விலை அமையும். இது இயற்கையாக அமையும் முத்தின் வரலாறு.

6. இனிச் சீன தேசத்துத் தரளங்களைப் புதுமையான வடிவுடனும் அமையச் செய்கிருர்களாம். அவர்கள் திறந்த கிளிஞ்சிலுக்குள் சில உருவச் சிலைகளைப் புக விடுகிருர்களாம். மணலை மூடுவது போலவே அச்சிலைகளையும் பசை மூடுமல்லவா? ஆகையால், பல வகை விக்கிரகங்களைப்போல முத்துக்கள் உருப் பெறுகின்றன. அவர்களின் திறமையை என்னென்று புகல்வது !

7. ஆஸ்திரேலியா, நியூ கினி, பிலிப்பைன், போர்னியோ முதலிய தீவுகளையடுத்த கடற்கரைகளில், முத்துக்கள் மிகுதியாகக் கிடைக்கின்றன. இந்தியாவின் தென்கோடியில் உள்ள பாண்டி நாடு, பழைய காலத்தில் முத்துக்குப் பேர் போனதாயிருந்தது. அங்கு,

இப்பொழுதும் முத்துக் குளித்தற்றொழில் சுமாராய் நடந்து வருகிறது.



8. முத்துக் குளிப்பவர்கள் கப்பல்களில் ஏறி, கடலில் ஆழமான இடத்தை அடைவார்கள்; அங்கே சில படகுகளை மிதக்க விட்டு நீரில் மூழ்குவார்கள். படகில் சிலர் தங்குவார்கள். நீரில் மூழ்குகிறவர்கள் தங்களுடன் கூடைகளைக் கொண்டு செல்வார்கள். அவர்கள் தரை மட்டத்தில் சென்று, இப்பிகளைத் திரட்டி வாரிக் கூடையை நிரப்பிக்கொண்டு மேலே கிளம்புவார்கள். படகிலுள்ளவர்கள், அக்கூடையை வாங்கி, அதிலுள்ள கிளிஞ்சில்களைக் கப்பலில் கொட்டுவார்கள். பிறகு,

கப்பல் கரையை அடையும். அங்கே கிளிஞ்சிலை உடைக்கும்பொருட்டுப் பலர் காத்திருப்பார்கள். அவர்களே ஒவ்வொரு கிளிஞ்சிலாக உடைத்து முத்தெடுப்பவர்கள்.

9. மிக இழிந்த ஒரு பிராணியினிடத்தில் தோன்றிய முத்து, உயர்ந்த மன்னர்களின் கழுத்துக்கு ஆரமாகிறது ; மற்றும் பல அணியாகிறது ; அரசர் முடியிலும் அணியப்பெறுகிறது. தாழ்ந்த சிப்பியில் பிறந்த முத்து, உயர்ந்த இடங்களில் வைத்துப் போற்றப்படுகிறது அல்லவா? இது போலவே, நல்லவர்கள் எங்குப் பிறந்தாலும் உயர்வடைவார்கள்.

**அரும்பதங்கள் :**

| | | |
|---|---|---|
| முத்து | பிளவு | தேறி |
| தவளம் | மட்டம் | தரளம் |
| இழிவான | ஒட்டிக்கொள் | புக |
| இப்பி | உறுத்தும் | தீவு |
| அகட்டில் | பசை | கோடி |
| கடினம் | பொழுதடைவில் | முத்துக்குளித்தல் |
| கிளிஞ்சில் | உறைந்து | கோவை |
| மேனி | இறுகும் | மற்றும் |
| உலவி | இங்ஙனம் | அணி |

**பயிற்சி :**

(அ) நவரத்தினம், பொழுதடைவில், முத்துக்குளித்தல்—பதம் பிரி.

(ஆ) கடினம், தரை, உறைந்து, திரண்டு—பொருள் எழுது.

(இ) புதுமை—எதிர் மொழி எழுது.

(ஈ) முடி—இரு பொருள் எழுது.

(உ) கடினம், கொழுகொழுத்து, நாளடைவில், மற்றும்—தொடரில் அமை.

(ஊ) முத்துக் குளித்தலைப்பற்றி ஆறு சொற்றொடர்கள் எழுது.

(எ) முத்து வெண்மை நிறமும், உருண்டை வடிவமும், பளபளப்பான ஒளியும், மிக்க விலை மதிப்பும் உடையது—தனிவாக்கியங்களாகப் பிரித்தெழுது.

(ஏ) **கோடிட்ட சொற்களை நீக்கி எதிர்ப்பதம் எழுது:-**

1. கடினமான பொருள் ஒன்று கொடு.
2. இப்பியின் வரலாறு புதுமையானது.
3. இப்பி தண்ணீரில் மூழ்கும்.
4. கிளிஞ்சிலை இப்பி திறந்து திறந்து மூடும்.

**கேள்விகள் :**

1. இப்பி எங்கே வாழும்?
2. இப்பி எப்போது நீரில் மூழ்கும்?
3. முத்தின் வரலாற்றினால் நீ அறியும் நீதி யாது?

**இலக்கணம் :**

**இடம் :**

நாம் யாரோடாவது பேசும்போது யாரைப்பற்றியாவது, நம்மைப்பற்றியாவது, நமது பேச்சைக் கேட்பவரைப் பற்றியாவது பேசிக்கொள்வது உண்டு.

அப்படிப் பேசுகிறவன், தன்னைப்பற்றிக் குறிக்கும் சொல்லைத் தன்மைச் சொல் என்றும், பேசுவதை எதிர் நின்று கேட்பவனைக் குறிக்கும் சொல் முன்னிலைச் சொல் என்றும், எவரைப் பற்றிப் பேசுகின்றானோ, அச்சொல்லைப் படர்க்கைச் சொல் என்றும் கூறுவது வழக்கம். இவை மூன்றும் இடம் எனப்படும்.

தன்மை (இடச் சொல்) **நான், யான் நாம், யாம், நாங்கள், யாங்கள்.**

முன்னிலை (இடச் சொல்) **நீ, நீர், நீங்கள்,**

படர்க்கை (இடச்சொல்) **அவன், அவள், அவர், அது, அவை,**

இப்பாடத்திலிருந்து ஒவ்வோர் இடத்துக்கும் மும்மூன்று சொற்களைப் பொறுக்கி எழுது.

# 16. ஒற்றுமை

1. எலிக்கும் பூனைக்கும் பகை என்பது நமக்குத் தெரியும். எலியை எங்கே கண்டாலும், எப்போது கண்டாலும், பூனை விடுவதில்லை. பூனையே எலியினத்திற்கு எமன் என்றும் கூறி விடலாம். ஆகையால், பூனையின் குரலைக் கேட்டாலே எலி காற்ருய்ப் பறந்தோடும். இவ்வளவு பகையுள்ள இரண்டும் ஒற்றுமைப்பட்ட ஒரு கதையைக் கூறினுல், நீங்கள் வியப்படைவீர்கள் அல்லவா?

2. ஒரு மலையின் அடிவாரத்தில் பூனை ஒன்று வசித்திருந்தது. அம்மலைக்குவட்டின் சூழலில் குடியிருந்த குறவன், அதைப் பார்த்து, எப்படியாவது அதைப் பிடிக்க வேண்டும் என நினைத்தான்; ஒரு நாள் அதற்கென்று கண்ணி விரித்தான். பூனை வலையில் சிக்கிக்கொண்டது. அது தன்னுல் இயன்ற வரையில் தப்பித்துக் கொள்ள முயன்றது. பூனையின் முயற்சி பயன் படவில்லை. அது, "இனி நாம் பிழைப்பதில்லை. இன்ருேடு நம் உயிர் மாளும். நம்முடல் குறவனுக்கு உணவாகிவிடும்," எனத் தீர்மானித்தது; தன் கதியை எண்ணி எண்ணி, ஏக்கமடைந்தது.

3. குறவன் வந்து தன்னை என்ன செய்வானோ, எப்படிக் கொல்வானோ என்று பூனை கலங்கிக்கொண்டிருக்கும் போது அவ்வழியே ஓர் எலி வந்தது. வந்த எலியைப் பூனை பார்த்து, "தம்பி, நான் வலையில் சிக்குண்டு வருந்துகிறேன். கொலைக்கஞ்சாத குறவன் வந்தால், கொன்று தீர்ப்பான். விரைவில் என்னை விடுதலை செய்," என்றது.

4. அதைக் கேட்ட எலி, "அண்ணா, உன் உயிருக்குத் துன்பம் உற்றிருக்கிறது. உன்னைக் காக்க என்னால் ஆகும். அது ஒரு பெரிய காரியமன்று. ஆனாலும், மேலே பார். எனக்கு எமனாக ஒரு பருந்து பறந்துகொண்டிருக்கிறது. அதனிடமிருந்து நானும் தப்ப வேண்டும். நாம் ஒற்றுமைப்பட்டால், இருவரும் பிழைக்கலாம்," என்றது.

5. அப்போது பூனை, "தம்பி, இனி நமக்குள் பகையில்லை. நீ என்ன சொன்னாலும், அதைக் கேட்டு அப்படியே செய்கிறேன். எதையும் தாமதமில்லாமல், யோசித்துச் சொல்," என்றது. "ஆம் அண்ணா, இச்சமயத்தில் நிதானம் கூடாது. நான் உன்னுடன் இவ்வலையில் புகுந்துகொள்கிறேன். நீ என்னைக் கொல்லாமல் இருந்தால், உனக்கும் கொலை நேராது. குறவன் வரும்போது வலையை நான்

துண்டித்துவிடுவேன். இருவரும் இன்பமாக வாழலாம். என்ன சொல்கிறுய்? உன் எண்ணத்தை ஒளியாமல் கூறு," என்றது எலி.

6. பூனைக்கு நல்லறிவு பிறந்தது. "அப்படியே செய். நான் உன்னைக் கொல்லமாட்டேன். உன்னை அடித்துத் தின்ருல், அடுத்தபடி என்னுயிர் எமனிடம் சேரும் என்பது எனக்குத் தெரியும். உண்மையாக உன்னைக் காப்பேன். என் சொல்லை நம்பு," என்றது. அதை நம்பி, எலியும் வலைக்குள் நுழைந்துகொண்டது.

7. பூனைக்கு நாவில் நீர் ஊறிற்று. ஆயினும், அது ஆசையை அடக்கிக்கொண்டது. ஏன்? எலியின் ஆவி போனுல் தன்னைக் காத்துக்கொள்ள முடியாதல்லவா? அதை உணர்ந்த எலியும் சிறிதும் பயமின்றி உடன் இருந்தது. பருந்து பயனின்றித் திரும்பிச் சென்றது.

8. வலையிற்புகுந்த எலி, சிறிது சிறிதாக வலையைச் சேதம் செய்யத் தொடங்கியது. ஆனுலும், பூனை வெளிப்பட்டுவிடும் அளவு அதுகத்தரிக்கவில்லை. பூனைக்கு ஆத்திரந்தான். "தம்பி, இன்னும் தாமதமா? ஏன் காலம் கடத்துகிறுய்? குறவன் வந்துவிடுவானே!"

என்றது. எலியோ, "அண்ணா, ஐந்து வந்தாலும் அவசரம் கூடாது; பத்து வந்தாலும் பதட்டம் கூடாது. தானத்தைக்காட்டிலும் நிதானம் பெரிது. பயப்படாதே! உன்னைப் பாதுகாப்பது என் கடமை," என்றது.

9. கொஞ்சநேரத்துக்குள் கண்ணிவிரித்த குறவன் வருவதை எலி பார்த்தது; அவன்,



அருகில் வரும்போது வலையை மிகுதியாகக் கடித்தது. குறவன் வலைக்குள்ளிருந்த இரண்டையும் பார்த்தான்; மனங்கொள்ளாத மகிழ்ச்சியடைந்தான்; எதை முதலில் பற்றுவதென யோசித்துக் கொண்டிருந்தான். வலைக்குள்ளிருந்த பூனை தாவியோடிற்று.

அதைப்பற்ற முயன்ருன் குறவன். ஆனுல், மார்ச்சாலம் மாயமாய் மறைந்தது. திரும்பிப் பார்ப்பதற்குள், எலியும் திட்டென்று வெளிப் பட்டது. வெளிப்பட்ட எலி விரைந்தோடி வளையில் புகுந்தது.

10. குறவனது ஆசையெல்லாம் வீணு யிற்று. 'கைக்கு எட்டியது வாய்க்கு எட்ட வில்லையே!' என்று அவன் வருந்தினுன்.

11. என்றும் பகையைப் பாராட்டும் பூனை, எலியை உதவி வேண்டிற்று. எலி பகையை மறந்து உதவ ஒப்புக்கொண்டது. தன்கையில் அகப்பட்ட எலியைப் பூனை இன்னல் செய் யாமல் விட்டது. அதைப்போலவே எலியும் பூனையை வலையிலிருந்து விடுவித்தது. இவ்வள வும் ஒற்றுமையினுல் நடந்தது அல்லவா? ஒன்றுபட்டால் உலகத்தையும் அடக்கி ஆள லாம் என்பது இதனுல் தெரிகிறது.

12. இதுபோலவே மக்கள் ஒன்றுபட்ட உணர்ச்சியுடையவர்களானுல், ஒன்ருலும் குறைவின்றி வாழலாம்.

**'ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு.'**

அரும்பதங்கள் :

| | | | |
|---|---|---|---|
| **எமன்** | **சிக்குண்டு** | **தானம்** | **துண்டித்து** |
| **அடிவாரம்** | **விடுதலை** | **நிதானம்** | **ஒளியாமல்** |
| **குவடு** | **தாமதம்** | **பற்றுவது** | **மார்ச்சாலம்** |

| | | | |
|---|---|---|---|
| சூழல் | கத்தரிக்க | சேதம் | மாயமாய் |
| கண்ணி | இயன்ற | பாராட்டும் | குறவன் |
| ஊறிற்று | கடந்து | மாளும் | உணர்ச்சி |
| ஏக்கம் | பதட்டம் | கதி | |

**பயிற்சி :**

(அ) பறந்தோடும், உற்றிருக்கிறது—பதம் பிரி.

(ஆ) பயந்து என்பதை வேறு மொழியால் கூறு.

(இ) குரவர், குறவர்—பொருள் எழுது.

(ஈ) ஒற்றுமை, மாளும், தாமதம் — எதிர் மொழி எழுது.

(உ) ஒளி—இரு பொருள் எழுது.

(ஊ) ஒளி, ஒலி—அர்த்தத்தின் வேறுபாடு கூறு.

(எ) ஏக்கம், விடுதலை, தானம், நிதானம், ஆளலாம்—தொடரில் அமை.

(ஏ) பூனையின் இயல்பைக் குறிக்கும் ஆறு சொற்றொடர்கள் எழுது.

(ஐ) குறவன் பூனையைப் பார்த்தான் ; எப்படியாவது பிடிக்க நினைத்தான்; ஒரு நாள் கண்ணி விரித்தான்; அதில் பூனை சிக்குமாறு செய்தான். இத்தொடர்களை ஒரே தொடராக்கு.

(ஒ) **கோடிட்ட இடத்தை நிரப்பு:—**

1. ——எலிகளுக்கு எமன்.
2. ——முயற்சி பயன்படவில்லை.
3. ——எண்ணிப் பூனை ஏங்கியது.

**கேள்விகள் :**

1. இப்பாடத்தில் ஒற்றுமை கொண்டவை எவை?
2. "ஆம் அண்ணா, இச்சமயத்தில் நிதானம் கூடாது," என்பது எதனால் எதனிடம் எப்போது கூறப்பட்டது?

3. 'குறவன் ஆசை வீணாயிற்று.' எப்படி?

4. இக்கதையின் நீதி யாது?

## இலக்கணம் :

### வேற்றுமை :

இராமன் அடித்தான், இராமனை அடித்தான்—இவற்றில் இராமன் என்பதற்கும் இராமனை என்பதற்கும் என்ன வேறுபாடு? இராமன் என்பது அடித்தலைச் செய்தவனைக் காட்டுகிறது. இராமனை என்பது அடிபட்டவனைக் காட்டுகிறது. இப்படி அடித்தவன் என்னும் பொருளை அடிபட்டவன் என்னும் பொருளாக வேற்றுமை செய்தது எது? ஐ என்னும் எழுத்து. ஆகையால், இது **வேற்றுமை உருபு** எனப்படும். வேற்றுமை எட்டு வகை.

முதல் வேற்றுமை—— **இராமன்**

இரண்டாம் வேற்றுமை—— **இராமனை—ஐ—உருபு**

மூன்றும் வேற்றுமை—— **இராமனோடு—ஒடு—,,**

நான்காம் வேற்றுமை—— **இராமனுக்கு—கு—,,**

ஐந்தாம் வேற்றுமை—— **இராமனிடமிருந்து—இருந்து—உருபு**

ஆறும் வேற்றுமை—— **இராமனது—அது — உருபு**

ஏழாம் வேற்றுமை —— **இராமனிடத்தில்—இல்—,,**

எட்டாம் வேற்றுமை—— **இராமனே — ஏ. —,**

(எட்டாம் வேற்றுமை—இது கூப்பிடுதல். இராமா, முருகா, அப்பா என வரும்.)

இப்பாடத்திலிருந்து ஒவ்வொரு வேற்றுமைக்கும் ஒவ்வோர் உதாரணம் எடுத்து எழுது.

# 17. மௌன வாசிப்பு—II

***மனத்திற்குள் படி :—***

1. இங்கிலாந்து தேசத்தை இரண்டாம் எட்வர்டு மன்னர் ஆட்சி புரிந்து வந்த காலத்தில், ஸ்காத்துலாந்து தேசத்தை ராபர்ட்டு புரூஸ் என்னும் மன்னர் ஆண்டு வந்தார். எக்காரணத்தாலோ அவ்விருவர்க்கும் பகை ஏற்பட்டது; கடும்போர் மூண்டது. புரூஸ் ஆறு முறை கடுமையாகப் போர் செய்தும் ஆறு முறையும் தோல்வியுற்ருர். அவருடைய படையில் ஒரு பகுதியும் அழிந்தது : நஷ்டமும் பலவாயின. அதனுல் வெட்கமுற்ற புரூஸ் மலைப்பக்கம் ஓடி, ஒரு குகையில் புகுந்து கொண்டு, தம் நிலைமையை நினைத்து வருந்தினர். ஆயினும், அவர் மனத்தில் தைரியம், ஊக்கம், முயற்சிக்கு உரிய எண்ணம் முதலியன நிறைந்திருந்தன.

2. அக்குகையில் ஒரு சிலந்தி கூடு கட்டிக் கொண்டிருந்தது. அந்தச் சிலந்தி கட்டப் போகும் கூட்டின் வலை நூலின் ஒரு நுனியை ஒரு மூலையில் ஒட்டவைத்துவிட்டு, மற்றொரு பக்கத்தை ஒட்ட வைப்பதற்கு எதிர் மூலைக்குத் தாவிற்று. அது ஆறு முறை தாவியும் ஒவ்

வொரு முறையிலும் எதிர்ப்பக்க மூலையை எட்ட முடியாமல் கீழே விழுந்தது. ஆயினும், அச்சிலந்தி தன் தோல்வியை நினைத்து வருந்த வில்லை ; தன் முயற்சியில் ஊக்கம் குன்றி விட்டுவிடவும் இல்லை. அது சிறிதும் அச்ச மின்றி மிக்க முயற்சியோடு ஏழாவது முறை தாவிற்று. ஏழாவது முறையில் சிலந்தி இல குவில் வெற்றி பெற்றது.

3. இதனைக் குகையிலிருந்த புரூஸ் பார்த் துக்கொண்டேதான் இருந்தார். அவருக்கு மனத்தில் ஊக்கமும் உற்சாகமும் உண்டா யின. "ஆறுமுறை தோல்வியுற்றோம் என்று அஞ்சாதே ; ஊக்கம் குன்றாமல் ஏழாம் முறை யும் படையொடு சென்று முயன்றால் வெற்றி பெறலாம்," என்று அச்சிலந்தி தன் செயலால் தமக்கு அறிவு புகட்டியதாக எண்ணினார். புரூஸ் ஏழாவது முறை திரண்ட சேனையோடு சென்று எட்வர்டை எதிர்த்தார். போர் கடுமையாகவே இருந்தது. ஆயினும், முடி வில் ஊக்கங்கொண்டு போர் செய்த புரூஸ் வெற்றி பெற்றார்,

4. எடுத்த காரியத்தை இனிது முடிக்கும் வரையில், இடையில் எவ்வளவு தடைகள் வந்தாலும் ஊக்கம் முயற்சி என்பவற்றை உறுதியாகக் கொண்டு வெற்றியடையும்வரை

விடாது நடத்த வேண்டும். அந்த முயற்சி திண்ணமாக வெற்றியைத் தரும்.

பயிற்சி :

1. இக்கதையைச் சொல்; சுருக்கி எழுது.
2. இதனால் அறியும் நீதி யாது?
3. இக்கதைக்கு என்ன தலைப்புக் கொடுக்கலாம்?

---

# 18. பச்சையப்ப முதலியார்

1. காஞ்சிமா நகரில் **விசுவநாத முதலியார்** என்பவர் ஒருவர் வசித்திருந்தார். அவருடைய மனைவியின் பெயர் **பூச்சியம்மாள்.** அவர்களுக்கு மிகுந்த பொருட்செல்வமில்லை; ஆனாலும், தயையும் தருமமும் உடையவர்களாயிருந்தார்கள். நற்குணமும் நற்செய்கையும் உடைய அவர்களுக்கு இரு பெண் குழந்தைகள் பிறந்தன. ஆண் மகவு இல்லையே என்ற குறை விசுவநாத முதலியாருக்கும் பூச்சியம்மாளுக்கும் ஏற்பட்டது. ஆகையால், ஆண்டவனை வேண்டி அரிய விரதங்கள் இருந்தார்கள்.

2. விசுவநாதமுதலியாரின் விரதத்தாலும், பூச்சியம்மாளின் புண்ணியத்தாலும், ஆண் மகன் பிறக்கும் அமயம் வாய்த்தது. ஆனால், பிள்ளை பிறப்பதற்குள் தந்தையார் மரண

மடைந்தார். கணவரை இழந்த பூச்சியம்மாள்




கதியின்றிக் கலங்கினர். இரு பெண் குழந்தை

களையும் கூட்டிக்கொண்டு **பெரியபாளையம்** என்னும் ஊரை அடைந்தார். அங்கே விசுவ நாதருடைய நண்பர் ஒருவர் இருந்தார். அவர் அந்தணர். அவர் பெயர் **ரெட்டிராயர்.** பூச்சியம்மாள் இராயருடைய இல்லத்தை அடைந்தார். ரெட்டிராயர், பூச்சியம்மாளை யும் குழந்தைகளையும் காப்பாற்றினர். அங்கே தான் ஆண் குழந்தை பிறந்தது.

3. பிறந்த குழந்தையைக் கண்ட ரெட்டி ராயர் மகிழ்ந்தார்; குழந்தைக்குப் **பச்சையப் பன்** என்ற பெயரிட்டார்; கண்ணுங்கருத்து மாக வளர்த்தார்; கல்வியுங் கற்பித்தார். பச் சையப்பரும் படிப்பில் மிக ஊக்கங்கொண்டு படித்து வந்தார். அப்போது, திடீரென்று ரெட்டிராயர் இறந்தார். அதன் பின்பு மூன்று குழந்தைகளுடன் பூச்சியம்மாள் சென்னையை அடைந்தார். அங்கே அப்போது பெரிய பணக்காரராய் இருந்தவர் **பௌனி நாராயணப் பிள்ளை** என்பவர். அவர் மிகவும் நற்குணம் வாய்ந்தவர்; தருமம் புரியும் தன்மையுடையவர். அவரிடத்தில் பூச்சியம் மாள் அடைக்கலம் புகுந்தார்; தம் கையி லிருந்த சிறிது பொருளையும் அவரிடமே தந்து வைத்தார். நாராயணப் பிள்ளை, பூச்சியம்மாள் தந்த பணத்தைப் பல வகையில் அதிகப்படுத்

தினுர் ; அப்படியே பச்சையப்பரையும் படிப்பில் முன்னுக்குக் கொணர்ந்தார். பச்சையப்பரும் படிப்பு, அறிவு, உழைப்பு, உண்மை முதலியவற்றில் சிறந்து விளங்கினுர்.

4. சில நாட்களில், பச்சையப்பர் ஒரு பீங்கான் கடையில் தரகு வேலைக்கு அமர்ந்தார். அதன் மூலம் நல்லவர் பலருடைய நேசம் பச்சையப்பருக்குக் கிடைத்தது ; மரியாதையும் ஏற்பட்டது. பச்சையப்பருக்கு இராணுவ உத்தியோகஸ்தர் ஒருவருடைய நட்பும் ஏற்பட்டது. அவ்வுத்தியோகஸ்தர் பச்சையப்பருக்கு ஒரு வேலை பார்த்துக் கொடுத்தார். ஆனுல், நாராயணப் பிள்ளை அதை விரும்பவில்லை ; பச்சையப்பரை அழைத்து வந்து ஒரு துரையிடத்தில் துவிபாஷியாக அமர்த்தினுர்.

5. சில நாளில் பச்சையப்பர் மணம் புரிய மனம் கொண்டார். இளமையிலே அவர் கொண்டிருந்த தரும குணமும் வளர்ந்தோங்கியது. ஆதலால், காஞ்சி ஈசுவரன் கோயிலில் ஒரு கலியாண மண்டபத் திருப்பணி செய்தார். கோயிலுக்கு வேண்டிய இரண்டு விக்கிரகங்களும் செய்து வைத்தார். இக்காரணங்களால் பச்சையப்பருடைய பெயரும் புகழும் எங்கும் பரவின. நல்ல செல்வாக்கும் ஏற்பட்டது.

6. பச்சையப்பருடைய உருவத்தைப் பாருங்கள். அவர் தலையில் தலைப்பாகையும், காதில் கடுக்கனும், பச்சைக்கல் முருகும், கழுத்தில் மணி மாலையும், கரங்களில் தோடாவும், கை விரல்களில் மோதிரமும் அணிந்திருந்தார். அவர் இடையில் சரிகைக் கட்டுடன் நிற்கிறார். கையில் எப்போதும் சிவப்பு உருமால் பிடித்திருப்பார். பச்சையப்பர் பல்லக்கில் ஏறிச் செல்வது வழக்கம். பச்சையப்பருக்கு இசை பாடவும் நன்றாகத் தெரியும். வீணையுடன் தேவார திருவாசகங்களைப் பாடுவார். பூசை செய்யும்போதும் தேவார திருவாசகப் பாக்களைப் பாடுவார். கடவுட்பூசையைப் பச்சையப்பர் ஒரு நாளும் மறந்தவரல்லர்.

7. நாளடைவில், பச்சையப்பர் ஒரு பெரிய தனவந்தராயினர். அப்போது அவர் **சலிவன் துரை**யிடத்தில் துவிபாஷியாய் அமர்ந்தார். வயதேற வயதேற, வாணிபம் முதலியவற்றில் மிகத் தேர்ச்சியடைந்தார். இராஜதந்திரம் மிக்க பச்சையப்பர் தஞ்சாவூரை அடைந்தார்; சிற்றரசர்களுக்கு உதவியாயிருந்தார்; பல குறுநில வேந்தர்களுக்குப் பணவுதவியும் புரிந்தார். அப்போது அவருக்கு வட்டியில் பணம் மிகுதியாகக் குவிந்துவிட்டது. அதனோடு வட்டத்துக்குப் பணம் கொடுத்த

தாலும் பொருள் திரண்டது. அதனல், பச்சையப்பர் **தஞ்சாவூரில்** பெரிய மாளிகை அமைத்துக்கொண்டார். பச்சையப்பர் தமது கடைசிக் காலத்தில், தஞ்சாவூரையடுத்த **திருவையாறு** என்னும் ஊரில் வசித்தார். **சென்னைச் சிந்தாதிரிப்பேட்டையிலும்** அவர் வசித்திருந்தார். அக்காலத்தில் அவருக்குப் பொருள் வருவாய் மிகுதி. மிக்க பொருள் குவிந்த காலத்திலும், அவர் கருவங்கொள்ள வில்லை.; பல தருமங்களைச் செய்து மகிழ்ந்தார். பச்சையப்பர் தமது உடல் நலனைக் கருதிக் **கும்பகோணத்தில்** சில நாள் தங்கியிருந்தார். ஆனல், அவர் திருவையாற்றிலேதான் இறந்தார்.

8. இனிப் பச்சையப்ப முதலியார் செய்த தருமங்களைக் கூறுவோம்: அவர் சிதம்பரத்தில் கிழக்குக் கோபுரம் கட்டினர்; காசி முதல் இராமேசுவரம் வரையில் உள்ள பல கோவில்களில் சிற்சில ஏற்பாடுகளைச் (கட்டளைகள்) செய்திருக்கிருர். காஞ்சிமா நகரிலும், சிதம்பரத்திலும், சென்னைப்பட்டினத்திலும் பச்சையப்பரது பொருளால் நியமிக்கப்பட்ட கல்விச்சாலைகளை யாரும் அறிவார்கள்.

9. தருமமே உருவமாகப் பிறந்த பச்சையப்பர் தமது நாற்பதாம் வயதாகிய 1794-ஆம்

வருஷம் ஆவி துறந்தார். ஆனால், அவருடைய புகழ் இறவாமல் இன்றும் நிலைத்திருக்கிறது. இனிமேலும் அவருடைய பேரையும் பெருமையையும் உலகம் மறவாது என்பது திண்ணம். அறம் புரிவதால் ஆகும் இன்பத்தை அடைந்த பச்சையப்பர் மக்களுக்கு வழிகாட்டியாயிருக்கிறார்.

அரும்பதங்கள் :

| | | |
|---|---|---|
| **அமயம்** | **செல்வாக்கு** | **இசை** |
| **வாய்த்தது** | **தோடா** | **வட்டி** |
| **அடைக்கலம்** | **சரிகை** | **வட்டத்துக்கு** |
| **தரகு** | **உருமால்** | **கல்விச்சாலை** |
| **இராணுவம்** | **பல்லக்கு** | **கோபுரம்** |
| **உத்தியோகம்** | **தேவாரம்** | **திண்ணம்** |
| **துவிபாஷி** | **திருவாசகம்** | **வீணை** |
| **திருப்பணி** | **தனவந்தர்** | |

பயிற்சி :

(அ) பொருட்செல்வம், நற்குணம் — பதம் பிரி.

(ஆ) அமயம், தனவந்தர், திண்ணம் — பொருள் கூறு.

(இ) ஏற்பாடு என்பதைக் குறிக்கும் வேறுமொழி கூறு.

(ஈ) தனவந்தர் — எதிர்ப்பதம் எழுது.

(உ) மணம், மனம் — பொருள் எழுது.

(ஊ) விரதம், தரகு, செல்வாக்கு, வட்டி, கட்டளை, திண்ணம் — தொடரில் அமை.

(எ) பச்சையப்பர் தேவாரம் படிப்பார், பூசை செய்வார், தருமத்தையே சிந்திப்பார், பலருக்கு நன்மை செய்வார் — ஒரே தொடராக்கு.

(ஏ) கோடிட்ட இடத்தை நிரப்பு :—

1. —— விசுவநாத முதலியார் வாழ்ந்தார்.
2. பெரியபாளையத்தில் —— வசித்தார்.
3. ——பீங்கான் கடையில் தரகுவேலை செய்தார்.
4. —— பச்சையப்பர் பெரிய தனவான் ஆனார்.

**கேள்விகள் :**

1. பச்சையப்பரின் பெற்றோர் யார் ?
2. பௌனி நாராயணப் பிள்ளை என்பவர் யார்?
3. பச்சையப்பர் எவ்வெவ்விடங்களில் வசித்தார்?
4. பச்சையப்பர் செய்த தருமங்கள் எவை ?

**இலக்கணம் :**

**வினைச்சொல் :**

கண்ணன் வந்தான். கண்ணன் வந்து போனான். நேற்று வந்த கண்ணன்.—இவற்றில் வந்தான் என்பது முடிவான பொருளைத் தருகிற வினைச்சொல்; ஆகையால், முற்று வினை எனப்படும். வந்து, வந்த என்பவை முடிவான பொருளைத் தாராத வினைச்சொல் ; ஆதலால், எச்ச வினை எனப்படும்.

இப்பாடத்திலிருந்து முற்றுவினை நான்கும், எச்ச வினை ஆறும் எடுத்து எழுது.

# 19. காஞ்சி மாநகரம்

1. நாம் வசிப்பது **இந்து தேசம்.** இது ஒரு புண்ணிய பூமி. இத்தேசத்தில் பல அழகிய பட்டணங்களிருக்கின்றன. அவற்றுள் ஏழு நகரங்கள் **மிகச்** சிறந்தவை. அவை **காசி, காஞ்சி, அவந்தி, துவாரகை, மதுரை, மாயை, அயோத்தி** என்பன. அந்த ஏழு நகரங்கள் முத்தி தரும் நகரங்கள் எனப்படும். அவற்றுள் காஞ்சியைக் காஞ்சிபுரம், காஞ்சி மாநகரம், கச்சிப்பதி எனவும் கூறுவதுண்டு.

2. காஞ்சிபுரம் தொண்டை நாட்டின் முகமாய் விளங்குகிறது. அது **பல்லவ அரசர்** களுக்குத் தலைநகரமாயிருந்தது. பல்லவர் குலத்துக்குத் **தொண்டைமான்** குலம் என்ற பெயருமுண்டு. ஆகையால், அவர்கள் ஆட்சிக்கு உட்பட்ட பூமி **தொண்டை மண்டலம்** எனப்பட்டது. காஞ்சி **பாலாற்றங் கரையிலிருக்கிறது** ; நெடுநாட்களாகவே சிறப்புடன் திகழ்கிறது. அதில் பல சிவாலயங்களும் விஷ்ணுவாலயங்களும் உள்ளன. அவற்றுள் **ஏகாம்பரநாதர் கோயில்** என்னும் சிவன் கோயிலும், **வரதராஜப் பெருமாள் கோயில்** என்னும் விஷ்ணுவின் ஆலயமும்

பெரியவை. இவையன்றிக் **காமகோடி பீடம், குமரகோட்டம், கச்சபேசுவரர் கோயில், பச்சை வண்ணர் கோயில், பவளவண்ணர் கோயில், வைகுந்தப் பெருமாள் கோயில், சொன்ன வண்ணம் செய்த பெருமாள் கோயில்** எனப் பல கோயில்களுமுண்டு.

3. காஞ்சி மாநகரத்தில் இருந்த பல்லவ மன்னர்களுள் மிக்க புகழ் பெற்றவர் இருவர். அவர்கள் **மகேந்திரவர்மன், நரசிம்ம வர்மன்** என்பவர்கள். மகேந்திரவர்மன் என்பவன் முதலில் சமணமதத்தைத் தழுவி இருந்தான். அவன் காலத்தில் **திருநாவுக்கரசர்** என்பவர் ஒருவர் இருந்தார். அவர் சமண மதத்திலிருந்து சைவத்துக்கு மாறினர். அப்போது மகேந்திரவர்மனும் சைவமதத்தில் சேர்ந்தான். சைவமதம் தழுவிய மகேந்திர வர்மன் மிகச் சிறந்த சிவத்தொண்டனுகி விட்டான். அதன் பயனுக அங்கங்கே பல சிவாலயங்கள் கட்டப்பட்டன.

4. மகேந்திரவர்மனுக்குப் பின்னுல் நரசிம்மவர்மன் பட்டம் பூண்டான். அவனை **மாமல்லன்** என்றும் வழங்குவதுண்டு. அவன் காலத்திலும் மிகப் பெரிய கோயில்கள் கட்டப்பட்டிருக்கின்றன. முன்னே கூறப்

பட்ட கோயில்களெல்லாம் பல்லவர்களால் கட்டப்பட்டவைகளே.

5. காஞ்சீபுரம் இருபகுதியாயுளது. அவை **பெரிய காஞ்சீபுரம், சின்னக் காஞ்சீபுரம்** எனப் படும். பெரிய காஞ்சியில் சிவன் கோயிலும், சின்னக் காஞ்சியில் விஷ்ணு கோயிலும் அமைந்திருக்கின்றன. ஏகாம்பரநாதர் கோயிலில் பங்குனி மாதம் சிறப்பான திருவிழா நடைபெறும். வரதராஜர் கோயிலில் வைகாசி மாதம் மேன்மையான திருநாள் நிகழும். மற்ற ஆலயங்களிலும் ஒவ்வொரு மாதத்தில் உயர்ந்த திருவிழாக்கள் நடக்கும். அங்கே நடக்கும் திருவிழாக்கள் கண்டு மகிழத் தகுந்தவை. பெருவிழாக்கள் இரண்டிலும் கணக்கற்ற மக்கள் திரள்திரளாக வந்து சேவிப்பார்கள்.

6. கச்சிப்பதியில் உள்ள தெருக்கள் மிக அகலமானவை ; நீளமும் உடையவை ; சிறந்த அழகு மிகுந்தவையும் ஆகும். காஞ்சி மாநகரத்தில், ஆங்காங்கு ஆழமும் அகலமும் உள்ள பல குளங்கள் உண்டு. அவை படிகளால் அழகு செய்யப்பட்டிருக்கும். அந்நகரத்தின் தெரு. கோயில், குளம் முதலியவற்றைப் பார்த்தால், பல்லாண்டுகட்கு முன்னமே காஞ்சி, நாகரிகத்திலும் கல்வி

யிலும் சிறந்திருந்த பெருமையை அறிந்து கொள்ளலாம்.

7. காஞ்சியில் கைத்தொழிலும், நெடுங்கால மாக நடந்து வந்தது. அது நெசவுத் தொழி லுக்கும் பேர் போனது. அதிலும், பட்டு நெசவு பன்னூறு ஆண்டுகளாக நிலை பெற்றுள்ளது. அதுபற்றியே, 'காஞ்சீபுரம் போனல் காலாட்டிப் பிழைக்கலாம்,' என்னும் பழமொழியும் வழங்குகிறது.

8. காஞ்சீபுரத்தில் பல கல்விமான்கள் வாழ்ந்திருந்தார்கள். அங்கே அருமையான பாடசாலைகள் அநேகம் இருந்தன. இன்னும் அது வியாபாரத்துக்கும் பேர் பெற்றது. உழவுத் தொழில் அங்கே ஊக்கத்தோடு செய் யப்பட்டது. **உமா** தேவி காசியிலிருந்து காஞ்சிக்கு வந்து, பயிர்த்தொழில் செய்து விளைந்த தானியத்தைக்கொண்டு முப்பத் திரண்டு வகையான தருமங்களைச் செய்தாள் என்னும் புராணக் கதை ஒன்று வழங்கு கிறது.

9. காஞ்சி மாநகரத்தில் ஏகாம்பரநாதர் கோயிலில் ஒரு தல விருட்சம் உண்டு. அது மாமரம். அதன் தோற்றம் ஈடும் எடுப்பும் இல்லாதது. ஒப்பு உயர்வில்லாத அத்தரு, தெய்வத்தன்மை பொருந்தியது. அதைக்

கண்ணுல் கண்டவர்கள், கடவுள் நிலையைக் கண்டதே போலக் களிப்பும் வியப்பும் ஒருங்கே கொள்வார்கள். பாமரரும் அம்மாமரத்தைக் கண்டால் கடவுள் நம்பிக்கை கொண்டு தம்மை மறந்து கைகூப்பி வணங்கிப் பாராட்டுவார்கள். அம்மரத்தைப் பார்ப்பவர், 'அம்மா! மரமா இது!' எனத் திகைப்பது திண்ணம்.

10. தெய்வத் தன்மை பொருந்திய அத்திருப்பதி, மாடமாளிகைகளாலும் கூடகோபுரங்களாலும் சிறந்து விளங்குகிறது. புகழ் மிகுந்த அந்நகருக்குப் பல திசைகளிலிருந்தும் பாதைகள் அமைக்கப்பட்டிருக்கின்றன.

11. தொண்டை நன்னுட்டின் தொன்மைப் பதியாகிய அதை எவரும் கண்டு களிக்க வேண்டுவது அவசியம்.

அரும்பதங்கள் :

| | | |
|---|---|---|
| முத்தி | ஈடு | திகைப்பது |
| புராணம் | எடுப்பு | மாடம் |
| திரள் | ஒப்பு | கூடம் |
| ஆங்காங்கு | நிலை | மேம்பட்ட |
| தலம் | பாமரர் | பாதைகள் |
| விருட்சம் | பாராட்டு | தொன்மை |

பயிற்சி :

(அ) விஷ்ணுவாலயம், ஆங்காங்கு, புராணக் கதை—பதம் பிரி.

(ஆ) ஈடு என்பதைக் குறிக்கும் வேறு மொழி கூறு.

(இ) திரள், கூப்பி, பதி—பொருள் கூறு.

(ஈ) பெருஞ்சிறப்பு, பெறுஞ்சிறப்பு—பொருள் எழுது.

(உ) பாதை—இரு பொருள் எழுது.

(ஊ) திகழ்கிறது, விழா, ஆங்காங்கு, எடுப்பு, மாடகூடம்—தொடரில் அமை.

(எ) திருநாவுக்கரசர் சைவமதத்தில் சேர்ந்தார்; அப்போது மகேந்திரவர்மனும் சேர்ந்தான்.—ஒரே தொடராக எழுது.

(ஏ) சின்னக் காஞ்சீபுரத்தைப்பற்றி ஐந்து சொற்றொடர்கள் எழுது.

(ஐ) **கோடிட்ட இடத்தை நிரப்பு :—**

1. —— இரு பகுதியாயிருக்கிறது.
2. —— ஏகாம்பரர் கோயில் உளது.
3. —— கைத்தொழிலும் நெடுங்காலமாக நடந்தது.
4. —— கோயிலின் தல விருட்சம் மாமரம்.

**கேள்விகள் :**

1. காஞ்சிப் பதியில் உள்ள கோயில்கள் எவை?
2. காஞ்சீபுரத்தைப் பற்றிய பழமொழி யாது?
3. காஞ்சி மாநகரத்தைப்பற்றிய புராணக்கதை என்ன?

**இலக்கணம் :**

**பெயரெச்சம், வினையெச்சம் :**

**வந்த** கண்ணன், **வந்து** போனான்—இச்சொற்றொடர்களில் **வந்த, வந்து** என்னும் இரண்டும் எச்ச **வினைகள்.** ஆயினும், வந்த என்பது பெயரைக்கொண்டு

முடிகிறது; ஆதலால், அது **பெயரெச்சம்**. வந்து என்பது வினையைக் கொண்டு முடிகிறது. ஆகையால், அது **வினையெச்சம்**. இப்பாடத்திலுள்ள எச்சவினைகளுள் இரண்டு பெயரெச்சங்களும் இரண்டு வினையெச்சங்களும் எடுத்து எழுது.

மூன்று கால வினைச்சொற்கள் :

கடவுள் வந்தார், கடவுள் வருகிறார், கடவுள் வருவார் என்னும் தொடர்களில் உள்ள வினைச்சொற்களுள் வந்தார் என்பது முன்னமே தொழில் நிகழ்ந்ததைக் காட்டுகிறது. ஆகையால், இது **இறந்தகால** வினைச்சொல். வருகிறார் என்பது இப்போது தொழில் நிகழ்வதைக் காட்டுகிறது. ஆதலால், **நிகழ்கால** வினைச்சொல். வருவார் என்பது இனி வருவதைக் காட்டும் வினைச்சொல் ; ஆகையினால் **எதிர்கால** வினைச்சொல். ஆகவே, வினைச்சொல்லில் மூன்று பிரிவுகள் உண்டு.

இப்பாடத்திலிருந்து ஒவ்வொரு காலத்துக்கும் உதாரணமாக மும்மூன்று வினைச்சொற்கள் எடுத்து எழுது.

# 20. கதைப் படம்



படம் பார்த்துக் கதை சொல்; எழுது.

## 21. பேராசை பெருங்கேடு.

மூப்புடைப் புலிதான் ஒன்று
 மூழ்கியோர் ஏரி யின்கீழ்க்
காப்புடன் தருப்பை தன்னைக்
 கையில்வைத் திருக்கும் போது
நாப்புடை மறைவ லாளன்
 நண்ணியவ் வழியிற் செல்லக்
கூப்பிடல் செய்தன் னேனைக்
 குறித்தந்தப் புலிதான் சொல்லும்: 1

" அந்தணா! இந்தக் காப்பை
 அளிப்பன்நீ வா," என் றேதச்
சிந்தையில் வேட்கை கூர்ந்து
 செப்புவான், " புலியா ரே!நீர்
வெந்துயர்க் கொலைமாந் தர்க்கு
 விளைப்பது விட்டுத் தானம்
எந்தநல் வழியிற் செய்வீர்?
 எனக்கதைக் கூறும்," என்றான். 2

புலியது கேட்டு, " நானே
 பூசுரா! நகமும் பல்லும்
இலன்;கிழ மானேன் ; பாவம்
 இழைப்பது விடுத்து நாளும்

பொலிதரு தானஞ் செய்கை
பொருளெனக் கொண்டேன்; அஞ்
சலமதில் மூழ்கி வந்து [சேல்!
தரும்இதைக் கொடுபோ," என்ன 3

நன்றென மறையோன் மூழ்க
நண்ணினன் ஏரி நீரில்
அன்றவன் கால்கள் சேற்றில்
அழுந்திடத் திகைத்து நின்றான்.
சென்றது புலி," நான் உன்னைச்
சேற்றினின் றெடுப்பேன்," என்னக்
கொன்றது; குருதி தன்னைக்
குடித்தது அறிகு வாயே. 4

பஞ்சதந்திரம்] [வீரமார்த்தாண்ட தேவர்

அரும்பதவுரை :

1. மூப்பு - கிழத்தன்மை, தருப்பை - ஒரு வகைப் புல், நாப்புடை - நாவின் தடிப்பு, மறை வலாளன் - வேதங்களில் வல்ல பிராமணன், நண்ணி - அடைந்து, கூப்பிடல் செய்து - கூப்பிட்டு, அன்னோனை - அவனை.

2. அந்தண - பிராமணனே, ஓத-சொல்ல, சிந்தை- மனம். வெம்மை+துயர் - வெந்துயர் - கொடிய துன்பம், வேட்கை - ஆசை, கூர்ந்து - மிகுந்து, எனக்கு+ அதை - எனக்கதை.

3. பூசுரா - பூமிக்குத் தேவனே (பிராமணனே), இழைப்பது - செய்வது, பொலிதரு - விளங்குகின்ற,

பொருள் - அடையத்தக்க செல்வம். அஞ்சேல் - பயப் படாதே, சலம் - நீர்.

4. மறைவலோன்-பிராமணன், அழுந்திட-புதைந்து விட, திகைத்து - செய்வது அறியாது பிரமித்து, குருதி-இரத்தம்.

**கேள்விகள் :**

1. புலி எத்தகையது? அது என்ன செய்துகொண் டிருந்தது ?
2. பிராமணன் எத்தகையவன் ?
3. புலி பிராமணனிடம் கூறியவை யாவை ?
4. பிராமணன் புலியை என்ன கேட்டான் ?
5. 'நீர் வெந்துயர்க்கொலை மாந்தர்க்கு விளைப்பது விட்டு நன்மை எந்த நல்வழியிற்செய்வீர் ?'— இக்கேள்விக்குப் புலி அளித்த விடை யாது ?
6. பிராமணன் என்ன செய்தான் ?
7. இக்கதையால் நீ அறியும் நீதி என்ன ?

**பயிற்சி ;**

இக்கதையைச் சுருக்கி ஒரு பக்கத்தில் எழுது.

## 22. பண்டை நிலம்

1. நாம் வசிக்கும் இடமாகிய பூமிக்கு '**நானிலம்**' என்னும் பெயர் உண்டு. **நான்கு நிலம்** என்னும் இரு சொற்கள் சேர்ந்து நானிலம் ஆயிற்று. இதை நான்கு வகையாக உள்ள நிலம் என்று விவரித்துச் சொல்லவேண்டும். ஏன் அப்படிச் சொல்லப்படுகிறது தெரியுமா? வையகத்தில் உள்ள எல்லா இடமும் ஒரே மாதிரி இருப்பதில்லை; மலைகளும் குன்றுகளும், மேடுகளும், காடுகளும், திட்டுகளும், திடர்களும், வயல்களும், நதிகளும், கடல்களுமாக இருக்கின்றன. பல வகையாக மாறுபட்ட இடங்களிருந்தாலும் அவற்றைச் சில வகையாக்கிப் பெயரிட்டிருக்கின்றனர் பண்டைத் தமிழகத்து மக்கள். அவை நான்கு வகைகள்.

2. மலை, குன்று, திட்டு, திடர் ஆகிய கற்கள் நிறைந்த இடம் **குறிஞ்சிநிலம்** எனப்படும். அதை **மலை நிலம்** என்றும் **மலை நாடு** என்றும் கூறலாம். அங்கு மக்கள் வாழ்கின்றனர். அவர்களுக்குக் **குறவர்** என்பது பெயர். குறவர்கள் குடிசைகளை அமைத்துக்கொண்டு உறைவார்கள். அவர்கள் ஊர்களுக்குச் **சிறுகுடி** என்பது பெயர். குறவர்கள் மலையில்

நெல்லும் தினையும் பயிரிடுவார்கள்; அங்குள்ள தேனிறால்களை அழித்துத் தேன் சேர்ப்பார்கள்; கிழங்கு அகழ்வார்கள். குறிஞ்சி நிலத்தில் கிளியும் மயிலும் உண்டு. புலி, கரடி, யானை முதலிய விலங்குகளை அங்கே காணலாம். சந்தனம், தேக்கு, அகில், அசோகு, நாகம், மூங்கில் ஆகியவை அங்கு வளரும். குறிஞ்சி, காந்தள், வேங்கை முதலியன அங்கே அதிகம். குறிஞ்சி நிலத்துக்குக் கடவுள் **முருகன்.**



3. உயர்ந்த மரங்களும் முட்செடிகளும் புதர்களும் நெருங்கியுள்ள இடத்துக்கு **முல்லை நிலம்** என்பது பெயர். அதைக் **காட்டு நிலம்** என்றும் கானக நாடு என்றும் கூறலாம்.

அங்கே, ஆயர்கள் வாழ்வார்கள். **அவ்விடம் பாடி** எனப்படும். பாடியில் உறையும் ஆயர், சாமை, வரகு முதலிய தானியங்களைப் பயிரிடுவார்கள்; **ஆவினம்** மேய்ப்பார்கள். பசு, எருமை, ஆடு, இவைகட்கு மூவினம் என்பது பெயர். முல்லை நிலத்தில் காட்டுக்கோழி போன்ற பறவைகளும், மான், முயல் முதலிய விலங்குகளும் வாழும். கொன்றை மரமும், காயா மரமும் பரந்திருக்கும். முல்லைப் பூவும் தோன்றிப் பூவும் மிகுதி. முல்லை நிலத்துக் கடவுள் **திருமால்.**



4. நன்செய், புன்செய் என்னும் வயல்களுடைய இடம் **மருத நிலம்.** அது **வயல் நிலம்** என்றும் பெயர் பெறும். அதையே வயல் நாடு என்றும் உரைக்கலாம். மருத நிலத்தில்

வாழ்பவர்களுக்கு **உழவர்** என்பது பெயர். அவர்கள் அழகான வீடுகளை அமைத்துக்கொண்டு வாழ்க்கை நடத்துவார்கள். அவ்வீடுகள் செறிந்த இடம் பேரூர் அல்லது மூதூர் என்னும் பெயர் பெறும். உழவர்கள் உழுது பயிரிட்டு உண்டு களிப்பார்கள். மருத நிலத்தில் நாரையும் அன்னமும் உண்டு; எருமை, நீர்நாய் முதலியன இருக்கும்; மருத மரம் மலிந்திருக்கும்; தாமரை, அல்லி முதலிய மலர்களை அங்குக் காணலாம். அங்குள்ளவர்களுக்குத் தெய்வம் **இந்திரன்.**



5. கடல் உள்ள இடம் **நெய்தல் நிலம்.** அது **கடல் நிலம்** எனப்படும். அதைக் கடல் நாடு என்றும் பகரலாம். அந்நிலத்துக் குடிகளுக்குப் **பரதவர்** என்பது பெயர். பரதவரை இக்காலத்தில் **செம்படவர்** என்பது வழக்கம்.

அவர்கள் கடற்கரையில் சிறு குடில்களில் குடியிருப்பார்கள். அக்குடிலமைந்த இடம் பட்டினம், பாக்கம் என்ற பெயர் பெறும். பரதவர் மீன் பிடிப்பவர்கள்; அவற்றை உலர்த்தி விலைப்படுத்துவார்கள்; உப்பு விளைவிப்பார்கள்.

6. நெய்தல் நிலத்தில் காக்கையும் மீனும் உண்டு; புன்னை மரம் காணப்படும்; நெய்தற்பூவும் தாழம்பூவும் மிகுதி; அந்நிலத்துக்கு **வருணன்** கடவுள்.

7. பண்டைத் தமிழ் நாடு இந்நிலையில் இருந்தது. பொதுவாகத் தமிழ் நாட்டு மக்களைப் பற்றிச் சிறிது கூறலாம்: நானிலங்களுள் எங்கும் தமிழர்களே இருந்தார்கள். அவர்கள் தமிழ் மொழியைப் பேசியதால், அப்பெயர் பெற்றார்கள். தமிழர் வீரம், கருணை, உண்மை, உழைப்பு, ஒற்றுமை, கடவுள் நம்பிக்கை ஆகிய நல்ல குணங்கள் உள்ளவர்கள். நடுவு நிலை தவறாத நல்லியல்பு தமிழர் மனத்தையே தாயகமாகக் கொண்டிருந்தது. ஆகையால், வஞ்சமில்லா நெஞ்சமும், பஞ்சமில்லா வாழ்க்கையும் உடையவர்களாயிருந்தார்கள். தமிழர் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே தக்க கல்வியறிவைப் பெற்றிருந்தார்கள். சித்திரம், சங்கீதம், கைத்தொழில், வியாபா-




ரம் ஆகிய எல்லாவற்றிலும் தமிழர்களுக்குத் திறமை ஏற்பட்டிருந்தது.

8. தமிழ் நாட்டு மக்கள், தந்நலம் ஒன்றையே கருதாமல் பொது நன்மைக்கே பாடு பட்டவர்கள்; பிறர் பசித்திருக்க விட்டுத் தாம் புசிக்காதவர்கள்; இல்லை என்னும் சொல்லைக் கூருத நல்லவர்கள்; பிறர் பொருட்டு உடல் பொருள் ஆவியையும் அளிக்கும் இயல்பு நிறைந்தவர்கள்; சீர்மை, பெருமை, புகழ் உடையவர்கள்; விதி விலக்குகளுக்கு இசைந்திருந்தவர்கள்; அரசு முறையை அறிந்தவர்கள். தமிழர் நாகரிகமே உலகில் தலைசிறந்ததாய் இருந்தது. தம் நடை, உடை, நடிப்பு, நாவன்மைகளைத் தமிழர்கள் நாகரிகமாகக் கருதவில்லை. பிற உயிர்களின் பொருட்டு மனம் இரங்கி, உபகாரம் செய்வதே நாகரிகம் என்னும் உண்மையைக் கண்டு ஒழுகியவர்கள் தமிழ் மக்களே.

9. இனித் தமிழ் நாட்டின் வளமையைக் குறித்துக் கொஞ்சம் கூறுவோம்: தமிழ் நாடு, இயற்கை வளம் மிக்கது. மலை, காடு, நாடு, கடல் ஆகிய இடங்களில் தந்தம், முத்து, பவளம், மணி, பொன் முதலியன கிடைக்கும். மலை, காடு, ஆறு, வயல், கடல் முதலிய கண்ணுக்கினிய காட்சியால் சிறப்புடையது தமிழ்

நாடு. பல நாட்டு மக்களுக்கும் இடந் தந்து வாழ்விக்கின்றது தமிழ் நாடு.

10 தமிழ் நாட்டின் நானில வளங்களை-யும், அழகிய தோற்றங்களையும் அடிக்கடி கண்டு களிப்பது தமிழர்களாகிய, நமது கடமை அல்லவா?

அரும்பதங்கள் :

| | | |
|---|---|---|
| நானிலம் | ஆயர்கள் | வருணன் |
| விலக்கு | வையகம் | பாடி |
| பரதவர் | பாக்கம் | திடர் |
| மருதம் | செறிந்து | நாகரிகம் |
| சிறு குடி | இருல் | பஞ்சம் |
| நாவன்மை | உபகாரம் | பேரூர் |
| சங்கீதம் | சீர்மை | அகழ்வார்கள் |
| மூதூர் | விதி | கானகநாடு |
| நெய்தல் | | |

பயிற்சி :

(அ) நானிலம், கானகநாடு, கடற்கரை—பிரித்து எழுது.

(ஆ) நாமம்—பொருள் கூறு.

(இ) அகழ், பாடி — இரு பொருள் எழுது.

(ஈ) விதி — எதிர் மொழி கூறு.

(உ) செறிந்து, பஞ்சம், இசைந்து, உபகாரம், தோற்றம்—தொடரில் அமை.

(ஊ) குறிஞ்சியைப் பற்றி ஆறு வரிகள் எழுது.

(எ) கோடிட்ட இடத்தை நிரப்பு :—

1. ——நிறைந்த நிலம் மலை நிலம்.

2. ——நிலத்தில் தேனிருல் மிகவுண்டு.
3. —— நிலத்தைக் கானகநாடு என்பர்.
4. கடற்கரையில் உள்ள ஊர் ——

**கேள்விகள் :**

1. குறிஞ்சி நிலத்தில் உள்ள பறவைகள் எவை ?
2. முல்லை நிலத்தில் உள்ள விலங்குகள் எவை ?
3. மருத நிலத்து மலர்கள் எவை ?
4. நெய்தல் நிலத்துத் தெய்வம் எது ?
5. தமிழருடைய இயல்பு யாது ?

**இலக்கணம் :**

நண்பா வா, நண்பா வருக என்பவற்றுள் வா என்பது கட்டளை இடுகிறது; அதாவது ஏவுகிறது. ஆதலால், வா என்பது **ஏவல் வினை.** வருக என்பது வேண்டுதல் போல இருக்கிறது. ஆகையால், அது **வியங்கோள் வினை.**

1. ஏவல் வினை, முன்னிலை இடத்தில் மாத்திரம் ஒருமை, பன்மை வேறுபாட்டுடன் வரும்.

உதாரணம்: நண்பா, வாழ்; நன்பர்களே **வாழுங்கள்.**

2, வியங்கோள் மூவிடத்துக்கும் ஐம்பாலுக்கும் பொதுவாய் வரும்.

(உ-ம்,) நான் வாழ்க. நாங்கள் வாழ்க. } தன்மை.
நீ வாழ்க. நீங்கள் வாழ்க. } முன்னிலை.
அவன் வாழ்க. அவள் வாழ்க. அவர்கள் வாழ்க. அது வாழ்க. அவை வாழ்க. } படர்க்கை.

# 23. நம் நாட்டுக் கைத்தொழில்

1. பண்டைக்காலத்தில் நம் இந்தியா-வில் கைத்தொழில் மேன்மையுற்றிருந்தது. ஆனால், இஞ்ஞான்று அது தாழ்வடைந்திருக்-கின்றது. ஏன் என்றால், மற்ற நாட்டுப் பொருள்கள் மட்டின்றி நம் நாட்டுக்கு வந்து சேர்கின்றன. அவை குறைந்த விலைக்கு விற்-கப்படுகின்றன. பிற நாட்டுப் பொருள்கள் குறைந்த விலைக்கு விற்கப்படுவதன் காரணம் என்ன ? அவை இயந்திரங்களின் உதவியால் செய்யப்படுவதேயாகும். நம் நாட்டுப் பொருள்களோ, கையாலேயே செய்யப்படல் வேண்டும். இயந்திரத்தால் செய்யப்பட்டா-லும் இயந்திரங்களைப் பிற நாட்டிலிருந்தே பெரும்பொருள் கொடுத்து வாங்க வேண்டும். பிற நாட்டுப் பொருள்கள் மலிவான விலைக்குக் கிடைப்பதால், மிக்க விலையையுடைய நம் நாட்டுப் பொருள்கள் விலையாவதில்லை. அத-னால், கைத்தொழிலைக் கவனிப்பாரில்லை. கவ-னிப்பாரில்லாவிட்டால், கைத்தொழில் வளர்ச்சியடையுமா ? முன் காலத்தில் நம் நாட்டில் எவ்வெக்கைத்தொழில்கள் ஏற்ற-முற்றிருந்தன என்பதைச் சிறிது கூறுவோம் :

2. நம் நாட்டில் விளையும் பொருள்களையும் நடைபெறும் கைத்தொழில்களையும் விரும்பியே **கிரேக்கரும், இத்தாலியரும்** இங்குப் போந்தனர். பல நூற்றுண்டுகளுக்கு முன்னே இந்தியா வாணிபத்தில் உயர்வடைந்திருந்தது. இந்து தேசத்தில் மிளகு, வாசனைப் பொருள், யானைத்தந்தம், முத்து, இரத்தினம் முதலியன மிகுதியும் உண்டு. மற்ற நாட்டவர்களின் மனத்தை அப்பொருள்களே கவர்ந்தன. மயில், குரங்கு, சந்தனக்கட்டை முதலியவை அந்நிய நாட்டு அரசர்கட்கு இங்கிருந்து அனுப்பப்பட்டன.

3. வேற்று நாட்டு மக்கள் தழைகளை உடையாக உபயோகித்திருந்த போது, இந்தியர்கள் பட்டாடைகளையும் பருத்தியாடைகளையும் உடுத்திருந்தார்கள்; பொன், முத்து, மணி முதலியவற்றால் செய்யப்பட்ட நகைகளையும் நாகரிகத்தோடு அணிந்திருந்தார்கள். அவர்கள் யானை, குதிரை, தேர் முதலிய வாகனங்களை உபயோகித்தார்கள்.

4. சர்க்கரை என்னும் இனிய பொருள் இந்தியாவிற்றான் முதன்முதல் செய்யப்பட்டது. பின்பு அது **யவனம், பாரசீகம், கிரீஸ், ஐரோப்பா** முதலிய இடத்தவர்க்கும் தெரிந்தது. நெடுநாட்களுக்கு முன்னரே நம் நாட்-

டில் மெல்லிய சிறந்த ஆடைகள் நெய்யப்பட்டன. **அவுரங்கசீபு** என்னும் அரசருடைய மகள், ஏழு உடைகளை ஒன்றன்மேல் ஒன்ருக உடுப்பாளாம். அப்படியுடுத்தாலும், அவளுடைய அழகு வெளியில் தெரியுமாம். அப்படிப்பட்ட ஆடை நெய்யப்பட்ட இடம் இந்தியாவே. அக்காலத்தில் நம் நாட்டில் மாலைப்பனி போலவும், மெல்லிய காற்றுப் போலவும், ஓடும் நீர் போலவும், வெண்புகை மாதிரியும், நீராவியொப்பவும், பாம்பின் தோல் போலவும், மூங்கிலின் உட்புறத்துள்ள வெண்மை நிறத் தோல் போலவும் மெல்லிய ஆடைகள் நெய்யப்பட்டன என்பது தெரிகிறது.

5. நூலை நூற்பதும், நெசவுத் தொழில் செய்வதும் ஆகிய வேலைகள் நம் நாட்டு ஆண்களுக்கும் பெண்களுக்கும் மிக எளிது. அதிலும், நூற்குந்தொழில் பெண்களால் பேணப்பட்டது. எலி மயிரால் எழில் மிக்க கம்பளங்கள் நெய்த இடம் நம் நாடு. இப்போதும் **காஷ்மீர** தேசத்தில் ஆட்டு மயிரால் **சால்வை, கம்பளம்** முதலியன நெய்யப்படுகின்றன. அவைகளை எந்நாட்டவரும் ஏற்று மகிழ்கிருர்கள். அந்தச் சால்வை, கம்பளங்களைப் போல

வேறெங்கும் செய்ய முடிவதில்லை என்பது உண்மை.

6. சாயந்தோய்ப்பதில் சிறந்த பழக்கம் இந்தியருக்குண்டு, இப்பொழுதும் நூலுக்குச் சிறந்த சாயம் ஏற்றுந்தொழில் காஷ்மீரத்தில் நடக்கிறது. அங்குத் தோய்க்கிற சாயம் நிலை-யாய் இருக்கிறது; நயமாயுள்ளது. அதற்குக் காரணம், அங்குள்ள நீரின் இயல்பு என்று எண்ணப்படுகிறது. இச்சாயத்தொழில் காஷ்-மீரத்தில் நீண்ட காலமாக நடைபெறு-வதாகும்.

7. இவ்வளவு சீரும் சிறப்பும் பெற்றி-ருந்த இந்தியா, இக்காலத்தில் முயற்சி குன்றி இருக்கிறது. ஏழை உழவர்கள் வருந்தி வயலை உழுகிறார்கள்; எப்படி எப்படியோ சேர்த்து எருவிடுகிறார்கள்; பின்பு விதைத்து, நீர் பாய்ச்சி, களை கட்டு, காவல் புரிந்து, விளைந்த பின் அறுவடை செய்கிறார்கள். அப்போது அவர்கள் பெறும் பயன், பெரும்பயனன்று. அதை அவர்கள் அறிந்தும் சும்மா இருக்கின்-றார்கள். தகுந்த முறையில் பாடு பட்டால், பயன் மிகுதியாகுமல்லவா? ஏழைகளைப் பற்றிக் கூறுவானேன்? அதிக நிலமுள்ளவர்-களும் அப்படியேதான் செய்கிறார்கள். பணக்-காரர் நன்கு முயன்று நல்வழி காட்டினால்,

மற்றையோரும் அதைப் பின் பற்றிப் பெரிதும் பயனடைவார்கள்.

8. நம் நாட்டில் கைத்தொழில் நாளுக்கு நாள் விருத்தியடைந்தே வருகிறது என்பதில் ஐயமில்லை. பம்பாயில் பஞ்சு வர்த்தகமும் நெசவும் நடக்கின்றன. வங்காளத்தில் கோணிப்பை செய்யப்படுகிறது. கல்கத்தா நகரில் காகிதச் சாலை வேலை செய்கிறது. சென்னையில் கண்ணாடி வேலை தொடங்கப்பட்டிருக்கிறது. மதுரையில் சாயத்தொழில் நிகழ்கிறது. மைசூரில் சோப்பு, காகிதம், மரச்சாமான், தந்தப் பொருள்கள் ஆக்கப்படுகின்றன. மலையாளத்திலும் நெசவு சுமாராய் இருக்கிறது.

9. நம்மவர் கைத்தொழிலின் உயர்வை உணர்ந்து உழைத்தால், நம் நாடு மற்றெல்லா நாடுகளைக்காட்டிலும் நன்னிலை அடையும் என்பதிற் சிறிதும் ஐயமில்லை.

அரும்பதங்கள் :

| | | |
|---|---|---|
| **இஞ்ஞான்று** | **கம்பளம்** | **இழிவுற்றது** |
| **அறுவடை** | **மலிவான** | **சால்வை** |
| **பாராட்டி** | **மேற்கொள்ள** | **போந்தனர்** |
| **சாயம்** | **பொருட்காட்சி** | **கோணி** |
| **அந்நிய நாடு** | **தோய்ப்பதில்** | **குன்றி** |
| **நன்னிலை** | **தழை** | **இயன்று** |
| **களை கட்டு** | **நாகரிகம்** | |

பயிற்சி :

(அ) வேற்றுநாடு, பட்டாடை, அரியாசனம், இழிவுற்றது, மேற்கொள்ள, நன்னிலை—பிரித்தெழுது.

(ஆ) மட்டு, பேண, இயன்று—பொருள் எழுது.

(இ) மலிந்த—எதிர் மொழி கூறு.

(ஈ) தடித்த எழுத்துள்ள சொல்லுக்கு எதிர் மொழி எழுது :—

1. **பண்டைக்** காலத்தில் கைத்தொழில் **மிகுதி**.
2. நம் நாட்டுப் பொருள் **மிக்க** விலையுடையது.

கேள்விகள் :

1. நம் நாட்டுப் பொருள்கள் விலையேறக் காரணம் யாது ?
2. மற்ற நாட்டவர் மனத்தைக் கவர்ந்த நம் நாட்டுப் பொருள்கள் எவை ?
3. சர்க்கரை முதன்முதல் செய்யப்பட்ட நாடு எது ?
4. காஷ்மீர் உடைகள் எப்படிப்பட்டவை ?

இலக்கணம் :

பட்டாடையும் பருத்தியாடையும் உடுத்தினல்—என்னும் சொற்றொடரில் பட்டாடை பருத்தியாடை என்பன பெயர்ச்சொற்கள் அல்லவா ? அவற்றோடு சேர்ந்துள்ள **உம்** என்பது இடைச்சொல். அவ்வாறு, பெயரோடாவது, வினையோடாவது, இரண்டின் இடையிலாவது வரும் சொல் **இடைச்சொல்**. இது தனியே வருவதில்லை.

கீழே காணும் தொடர்களில் உள்ள இடைச்சொற்களை எடுத்தெழுது :—

1. தழைகளை உடையாக உடுத்தனர்.

2. பாலுடன் பழம் கூடியது போல இருந்தது.

3. பத்தோடு மூன்றைக் கூட்டு.

அம்மா,—இந்தச் சொல்லின் முடிவில் உள்ள குறியைப் பாருங்கள். இது **கால் புள்ளி** எனப்படும். கால் புள்ளிக்குப் பிறகு நாம் சிறிது நேரம் நிறுத்திப் பின்பு படிக்கத் தொடங்க வேண்டும், '**அண்ணா, நான் சென்றதனால், இராமன் மகிழ்ந்தான்,**' என வரும்.

அப்பா, என்னை ஏன் அழைத்தீர்கள் ?—இதன் முடிவில் உள்ள குறி கேள்விக்குறி. இது வினாவைக் காட்ட வருவது.



# 24. சூரியன்

1. நமது முகத்தில் இரண்டு விழிகள் இருக்கின்றன. அவைகளால் என்ன பயன் என்பதை முன்னமே படித்திருக்கின்றோம். எதிரில் உள்ள பொருள்களைப் பார்த்தறியும் திறமை கண்ணுக்கு இருந்தாலும், இருளில் இருக்கும் எதையும் அதனால் அறிய முடியா-தல்லவா? இருள் ஒழிந்தால், எதையும் விழி அறியும். அவ்விருளையொழிப்பது எது? அது-தான் சூரியன். சூரியனுக்கு **ஞாயிறு, பகலவன், கதிரவன், இரவி** எனப் பல பெயர்கள் உண்டு.

உலகத்தின் இருளைப் போக்கி ஒளியும் வெப்பமும் அளிக்கும் பகலவனால் மற்றும் பல நன்மைகளும் உண்டு. ஆதலால், நாம் சூரியனைப்பற்றிக் கட்டாயம் அறிந்துகொள்ள வேண்டும்.

2. நாம் சூரியனை எங்கே காண்கிறோம்? காலையில் கிழக்கே பார்க்கிறோம்; நடுப்பகலில் உச்சியில் காண்கிறோம்; மாலையில் மேற்கில் பார்க்கிறோம். மாலை ஆறு மணி முதல் மறு நாள் காலை ஆறு மணி வரையில், அதாவது, இரவு நேரத்தில் இரவியைக் காண முடியாது. இப்படிக் காலையில் கிழக்கே தோன்றும் கதிரவன், பகல் முழுதும் வான வெளியில் மேற்கு நோக்கி நகர்ந்து சென்று, மாலை வேளையில் மேற்கே மறைவதாக நமக்குத் தோன்றுவது உண்மைக் காட்சியா? அன்று. அது பொய்த் தோற்றம். ஆனால், உண்மை நிகழ்ச்சி யாது?

3. சூரியன் தன் இடம் விட்டுப் பெயராத ஒரு பொருள். அது, பந்து போன்ற ஒரு நெருப்பு உருண்டை. எப்பொழுதும் எரிந்துகொண்டிருப்பதனால், அதனிடத்திலிருந்து ஒளியும் வெப்பமும் உண்டாகின்றன. அவ்வெப்பத்தோடு கூடிய ஒளிதான் வெயில். வெயிலைத் தருவதால் சூரியனை **வெயிலவன்**

அல்லது வெய்யோன் என்றும் கூறுவதுண்டு. வெய்யோன் உதவியின்றி எப்பொருளும் உயிர் வாழ முடியாது. ஆகையினலேயே அதை மக்கள் தெய்வமாகக் கொண்டாடு-கின்ருர்கள்.

4. சூரியனுக்கு மற்ருேர் இயல்பும் உண்டு. பூமியையும் மற்றக் கிரகங்களேயும் ஒரே நிலேயில் நிறுத்துவது சூரியன்தான். சூரியனுக்கும் பூமிக்கும் இடையில் உள்ள தூரம் சுமார் ஒன்பது கோடியே முப்பது லட்சம் மைல். அது பூமியைவிடப் பல கோடி மடங்கு பெரியது. சூரியன் என்னும் உருண்-டையில் குறுக்களவு எட்டு லட்சத்து அறுபத்-தாருயிரத்து ஐந்நூற்று நாற்பது மைல். சூரிய கோளம், சுழலும் தன்மையுடையது. அது ஒரு முறை தன்னியற்கைப்படி சுழல்வ-தற்கு இருபத்தைந்து நாட்கள் வேண்டும். பகலவன் ஒளிக்கு நிகராக வேறெந்த ஒளியை-யுங் கூற முடியாது. ஆகையினலேயே பகலில் சந்திரன், நட்சத்திரம் முதலியவை நம் கண்-ணுக்குப் புலப்படுவதில்லே.

5. சூரியனேப்பற்றி நம் முன்னேர்கள் சில செய்திகளேக் கூறியிருக்கிருர்கள். அவற்றையும் இங்கே குறிப்போம்: "சூரியன் ஒரு-தேரில் ஏறி வான வீதியில் ஓயாமல் போய்க்-

8

கொண்டிருக்கிறன். அவனுடைய தேருக்கு ஒரே சக்கரந்தான் உண்டு. அத்தேரை ஓட்டு-கிறவன் **அருணன்** என்னும் பாகன். பாகன் நிறம் செம்மை. அவனுக்குக் காலில்லை. அரு-ணன் முடவன். பகலவன் தேரை ஏழு குதிரை-கள் இழுக்கின்றன. அவை பசுமை நிறமுடை-யன," என்று கற்பித்துள்ளார்கள்.

6. சூரியன் இல்லை என்றல், நமக்குக் கால வரையறையே இல்லை என்னலாம். சூரி-யன் விளங்கும் காலமாகிய சுமார் பன்னி-ரண்டு மணி நேரமே ஒரு பகல். அது தோன்-ருத காலமே இரவு. இப்படி ஒரு பகலும் ஓரிரவும் கொண்டது ஒரு நாள் என வழங்கு-கிறது. அது போன்ற ஏழு நாட்கள் கொண்-டது வாரம்; முப்பது நாட்கள் முடிந்தது மாதம்: பன்னிரண்டு மாத கால அளவாகிய ஆண்டு என்னும் அளவுக்குக் காரணம் கதிர-வன் அன்ருே? அதைக்கொண்டே பகற்-பொழுதைப் பன்னிரண்டாகப் பிரித்து ஒவ்-வொரு பிரிவுக்கும் **மணி** என்னும் பெயர் இட்டனர். மணியை அறுபதாக்கி, ஒரு பகு-தியை ஒரு **நிமிஷம்** என்று கூறினர். அதை-யும் அறுபது கூறு செய்து, **விஞடி** என்றனர். மணி, நிமிஷம், விநாடி என்பன ஆங்கில முறை. தமிழர் பகலை முப்பது கூருக்கி அக்-

கூற்றுக்கு **நாழிகை** எனப் பெயரிட்டனர். அதை அறுபது பிரிவாக்கி, அப்பிரிவுக்கு **விநாடி** என்னும் பெயர் அமைத்தனர். தமிழர் கூறும் நாழிகை இரண்டரை கூடியது ஆங்கில முறைப்படி ஒரு மணியாகும்.

7. மக்கள் உயிர் வாழ்வதற்கு இன்றியமையாத காற்றும் சூரிய வெப்பத்தினுல் சுத்தப்படுகிறது. கெட்ட காற்றை நல்ல காற்ருக்கும் தொழிலைச் சூரியன் செய்யாவிடில் பல்லுயிரும் இறந்தொழியும் ; தாவரங்களும் தலை காட்டுவதற்கியலாது. அடுத்தபடி அனைத்துயிருக்கும் உணவாயிருப்பதும், உணவை விளைவிப்பதும் நீர். நீருக்குக் காரணம் மழை. அம்மழையை மாநிலத்துக்குத் தருபவன் ஆதவன். சூரியனில்லாவிட்டால் வெப்பமில்லை. வெப்பமில்லாமல் நீராவி ஏற்படாது. அது ஏற்படாமல் மேகம் ஏது? மேகமில்லாமல் மழை பெய்யாதல்லவா?

8. இவ்வளவையும் கருதி, அறிஞர் சூரியனைத் தெய்வமாகப் போற்றுகின்றூர்கள். அதன் பெயரால் ஒரு நாள் அமைத்தார்கள். காலை, நண்பகல், மாலை ஆகிய முப்பொழுதிலும் சூரியனை வணங்கும் முறையை விதித்தார்கள். ஞாயிற்றுக்கிழமைதோறும் சூரியனைக் கருதி விரதமிருக்கும் வழக்கம் செய்தார்-

கள். ஆண்டுதோறும் தைம்மாதம் முதல் தேதியில் சூரிய பூசையைச் செய்தார்கள். ஒளி மிகுந்த சூரியனைப் புகழுக்கு உதாரண-மாக அறிஞர் கூறுவது வழக்கம். மிகுந்த புத்தியுள்ளவனைப் பார்த்து, "அப்பா, அவன் புத்தியில் ஆதவன்!" என்பதும் உண்டு.

9. இப்படிப்பட்ட இயற்கைப் பொருள்-களின் உதவியாலேயே உலகத்து உயிர்கள் இன்பமாய் வாழ்கின்றன. இயற்கைப் பொருளை அளித்த இறைவனை எப்போதும் துதித்து நன்றி செலுத்துவதே அறிவுடை-யோரது கடன்.

அரும்பதங்கள் :

| | | |
|---|---|---|
| **பகலவன்** | **இசைப்போம்** | **விநாடி** |
| **கதிரவன்** | **ஓயாமல்** | **பரிதி** |
| **வெய்யோன்** | **தொடை** | **பட்டொழியும்** |
| **வெகுளி** | **முடவன்** | **தலை காட்டுவது** |
| **நிகழ்ச்சி** | **கூறு** | **கோளம்** |
| **மடங்கு** | **நிமிஷம்** | **கழிவது** |
| **செலுத்துவது** | **செகண்டு** | **ஆதவன்** |
| **புலப்படுத்துவது** | **நாழிகை** | |

பயிற்சி :

(அ) புலப்படும், பட்டொழியும்—பதம் பிரி.

(ஆ) சூரியனைக் குறிக்கும் சில சொற்களைக் கூறு.

(இ) விழி, நிகழ்ச்சி, கோளம், ஈந்த—பொருள் எழுது.

(ஈ) வெய்யோன், குறுக்கு, செய்தி, பட்டொழி-யும்—தொடரில் கூட்டி எழுது.

(உ) தடித்த எழுத்துள்ள சொல்லை நீக்கி எதிர்மொழி எழுது :—

1. சூரியன் **பகலில்** தோன்றும்.
2. சூரியன் **இல்லை** என்றால், கால வரையறை இல்லை.
3. **வெப்பம்** இல்லாமல் நீராவி ஏற்படாது.

**கேள்விகள் :**

1. சூரியனுக்கு எதனால் வெய்யோன் எனப் பெயர் வந்தது ?
2. பொய்த்தோற்றம் எது ?
3. கால வரையறை எதனால் ஏற்படுகிறது ?
4. ஆங்கிலக் கால அளவுகள் எவை ?
5. மழைக்குக் காரணம் எது? எப்படி ?

**இலக்கணம் :**

'ராஜகிரி மிகப்பெரியது' என்பதில் உள்ள **மிக** என்பது பெரியது என்பதை அதிகப்படுத்திக் காட்ட வந்தது. இவ்வாறு பெயர் வினைகளின் இயல்பைக் குறிக்க உரிமைப்பட்ட சொல், **உரிச்சொல்** எனப்படும், உரிச்சொல், பெயரோடு சேர்ந்து வந்தால், **பெயர் உரிச்-சொல்** ; வினையோடு சேர்ந்து வந்தால், **வினை உரிச்-சொல்.**

கீழுள்ள தொடர்களிலிருந்து எது பெயருரிச்சொல் எது வினையுரிச்சொல் என்பதை எடுத்துக் காட்டு :—

1. தேசிங்கு மிக்க வெகுளி கொண்டான்.
2. நவாபு படை சாலப் பெரியது,
3. ஒன்றைவிட மற்றொன்று மிக உயர்ந்தது.

கீழுள்ள தொடர்களில் வேண்டும் குறிகளை இடு :—

கந்தா செஞ்சிக்கோட்டையை நீ பார்த்ததுண்டா

ஆ ஆ செஞ்சிக்கோட்டை மிகப் பெரியது

## 25. மௌன வாசிப்பு—III

*மனத்திற்குள் படி :—*

ஒரு கிராமத்தில் கிழவன் ஒருவன் தன் தோட்டத்தில் மாங்கன்று ஒன்றை நட்டுக்கொண்டிருந்தான். அந்தக் கிழவன் மிகவும் வயதானவன். அவன் பக்குவமாகக் குழி தோண்டி எரு இட்டு மாங்கன்றை நட்டுக்கொண்டிருந்ததை அந்த வழியே சென்ற இளைஞன் ஒருவன் நெடுநேரமாகப் பார்த்துக்கொண்டிருந்தான். அவன் செயல் வாலிபனுக்கு வியப்பைத் தந்தது. அதனால், வாலிபன் கிழவனிடம் சென்று, “ஐயா, பெரியவரே, உங்களுக்கு வயது சற்றேறக்குறைய எழுபதிற்கு மேல் இருக்குமே! இந்தச் செடி மரமாகித் தரப் போகும் பழங்களைப் பறித்துத் தின்னவோ இந்த மாஞ்செடியை நடுகிறீர்? இச்செடி மரமாகித் தரப்போகும் பழத்தைத் தின்னும் அளவு நீர் உயிர் வாழ்ந்திருப்பீரோ?” என்று பரிகாசமாகக் கேட்டான்.

வாலிபன் கூறியவற்றைக் கேட்ட கிழவன் அவன் அறியாமையை நீக்க, “தம்பீ, நீ நல்ல கேள்வி கேட்டாய்! ஆனால், நீ கொஞ்சமும் யோசிக்காமல் கேட்டுவிட்டாய். இந்-

தத் தோட்டத்தைச் சுற்றிப் பார். அதோ தோன்றும் பலா, மா, தென்னை முதலான மரங்கள் யார் நட்டவை? என் பாட்டனர் காலத்தில் நடப்பட்டவை. இப்பக்கத்தில் உள் ளவை என் தந்தையார் நட்டு வளர்த்தவை, இவை யாவும் நான் நட்டவை. இவற்றின் பயனை எல்லாம் நான் அனுபவிக்கிறேன். எனக்காகப் பிறர் உழைத்தார், நானும் பிற-ருக்காக உழைக்க வேண்டாவா? நான் நட்டு வளர்ப்பவற்றின் பயனை என்மகன், பேரன் முதலியவர் அனுபவிப்பர். இதனை நீ அறிய-வில்லையே!' 'என்ருன்.

இம்மொழிகளைக் கேட்ட வாலிபன் வெட்கமடைந்தான். தான் சுறுசுறுப்பாக வேலை செய்ய வேண்டும் என்பதும், அதுவும் பிறர் நலத்திற்காகப் பாடு படவேண்டும் என்-பதும் அந்த வாலிபனுக்கு விளங்கின. தான் இப்பொழுது அனுபவிக்கும் இன்பமெல்லாம் பிறர் கஷ்டப்பட்டதன் பயனே என்பதை அவன் அறிந்தான். "என் கடன் பணி செய்து கிடப்பதே," என்பது அவனுக்கு நன்கு விளங்கிற்று. தனக்கு அறிவு புகட்டிய கிழவனுக்கு வணக்கம் செலுத்திவிட்டு அவ்-வாலிபன் சென்ருன். அன்று முதல் அவன் பிறர் நலத்திற்கே உழைப்பதென உறுதி செய்துகொண்டான்.

**பயிற்சி :**

1. கதையைச் சொல் ; சுருக்கி எழுது.
2. இதற்கு என்ன தலைப்புக் கொடுக்கலாம் ?

**இலக்கணம் :**

'முத்தன் கண்டான்' என்பது ஒரு தொடர். அதில் முத்தன் என்பவனால் 'காணும்' தொழில் நடந்தது. தொழில் நடத்திய முத்தன் என்னும் சொல் **எழுவாய்** எனப்படும். அவனால் நிகழ்ந்த செயலைக் காட்டும் **கண்டான்** என்னும் சொல் **பயனிலை** எனப்படும். 'முத்தன் சூரியனைக் கண்டான்,' என்றால், **சூரியன்** காணப்பட்ட பொருள் ஆகின்றது. ஆகையால், அது செயப்படுபொருள் ஆகும். இவற்றைக் கண்டு பிடிக்க முதலில் பயனிலையை எடுத்துக்கொண்டு 'யார்? எது?' என்று கேட்டால், எழுவாய் வரும். பின்பு 'யாரை? எதை?' எனக் கேட்டால் செயப்படுபொருள் வரும். இப்படியே கீழுள்ள சொற்றொடர்களில் எழுவாய், பயனிலை, செயப்படுபொருளைக் கண்டுபிடி :—

1. நாம் கடவுளைத் தொழுகிறோம்.
2. ஞாயிறு ஒளியைத் தருகிறது.
3. உழவன் நிலத்தை உழுகிறான்.

,—இது காற்புள்ளி !—இது வியப்புக்குறி

.—இது முற்றுப்புள்ளி ?—இது வினாக்குறி.

இவைகளை உபயோகப்படுத்தி ஐந்து சொற்றொடர் எழுது.

# 26. கடிதங்கள்

*(1) தந்தையாருக்குக் கடிதம்*

உத்திரன்மேரூர்,
*25—8—1954.*

அன்புள்ள தந்தையாருக்கு வணக்கம்!

நலம் ; உங்கள் நலம் அறிவிக்க வேண்டுகிறேன்.

இவ்விடத்தில் நான் நன்றாகப் படிக்கிறேன். ஆயினும், மாமா என்னை எப்போதும் படிக்க வேண்டும் என்று தொந்தரவு செய்கிறார். ஆகையால், எனக்குக் கஷ்டமாயிருக்கிறது. அடுத்த வாரம் எங்களுக்கு விடுமுறை தொடங்கும். அதற்குள் நீங்கள் வந்து விடுமுறைக்கு என்னை அழைத்துக்கொண்டு போக வேண்டும் ; நான் வரும் தினத்தைக் கடிதத்தில் எழுதுகிறேன். ஆரணி பஸ் ஸ்டாண்டுக்கு நமது குதிரை வண்டியை அனுப்பவும்.

உங்கள் அருமை மகன்,
முருகேசன்.

(முகவரி)

உயர்திரு,

இராமையா பிள்ளை அவர்கள்,
தலைமையாசிரியர்,
போர்டு எலிமெண்டரிப் பாடசாலை,
கேளூர் போஷ்டு
போளூர்.
(வடார்க்காட்டு ஜில்லா)

### (2) ஆசிரியருக்கு மாணவன் கடிதம்

திரு ஆயர்பாடி,
27—8—1954.

அருள் மிக்க ஆசிரியர் திருவடிகளுக்கு வணக்கம்!

நலன். உங்கள் நலனறிய விரும்புகிறேன். நீங்கள் எனக்குப் புகட்டிய கல்வியாலும் புத்திமதிகளாலும் நான் எனக்குக் கிடைத்த உத்தியோகத்தில் சுகமாய் இருக்கிறேன்.

இப்பொழுது எங்களுக்குக் கோடை விடுமுறை; இவ்விடுமுறை இன்னும் ஒரு மாதம் வரையிலிருக்கிறது. ஆகையால், உங்களைப் பார்க்க வர நினைத்திருக்கிறேன். நான் வரும்போது சென்னை வழியாக வருவேன். உங்களுக்குத் தேவையுள்ள பொருளைக் குறித்தனுப்பினால் வாங்கி வருவேன். உடனே தயவு செய்து பதில் எழுதக் கோருகிறேன். உங்கள் கடிதம் கண்டு புறப்படுவேன்.

உங்கள் மாணவன்,
ந. ஈசன்

(முகவரி)

உயர்திருவாளர்
ஆசிரியர் கா. மு. சுந்தரனார் அவர்கள்,
மகாவித்துவான், சாமநகர்,
இராயவேலூர் மார்க்கம்.

### (3) புத்தகக் கடைக்குக் கடிதம்

மதுரை.
28—8—54

ஐயா,

உங்கள் கடையில் உள்ள கீழே குறிக்கும் புத்தகங்களை என் பேருக்குப் பார்சலில் அனுப்பி வைக்கவும். அவைகளின் விலைக்காக இன்று ரூபாய் 12—0—0 மணியார்டர் செய்திருக்கிறேன்.

| | |
|---|---|
| நன்னூல், | 1. 3—8—0 |
| திருக்குறள் (உரையுடன்) | 1. 5—0—0 |
| சூடாமணி நிகண்டு, | 1. 1—4—0 |
| மாணவர் தமிழ் அகராதி, | 1. 2—0—0 |
| ஆக ரூ. | 11—12—0 |

என் முகவரி :—
ம. சொக்கன்,
'கமலாலயம்'
சன்னதித் தெரு.
மதுரை.

(முகவரி)

மானேஜர். M. துரைசாமி முதலியார்,
1/1, மலையப்பெருமாள் தெரு. சென்னை—1.

# 27. மானமே உயிர்

## [நாடகம்]

### முதற் களம்

**இடம் :** சிறைச்சாலை.
**காலம் :** நண்பகல்
**பாத்திரங்கள் :** சேரமன்னன், இரு காவலர்.

**சேரன் :** (தனக்குள் தானே) நான் பெரிய வீரன் என்று எனக்குள்ளே மனப்பால் குடித்துக்கொண்டிருந்தேன் ; இப்போது என்னிலும் மிக்க வீரன் உளன் என்பதை அறிந்தேன். இவ்வளவு காலம் வீரத்தைக் காத்து வந்த என் குலத்தினர்க்கு இன்று மாசு உண்டாகும்படி செய்துவிட்டேன். என் தோல்வி என் நெஞ்சைப் பிளக்கின்றது! ஆ! நா வறண்டுவிட்டது! (காவற்காரனை நோக்கி) சேவகனே, சிறிது குடிப்பதற்கு விரைவில் தண்ணீர் கொண்டு வா.

**காவலன் :** இரும், இரும், தண்ணீர் வரும். என் நண்பர் வந்திருக்கிறார் இரண்டொரு வார்த்தைகள் சொல்லிவிட்டுப் போகிறேன்.

**சேரன் :** எனக்கு நாவறட்சி அதிகமா-யிருக்கிறது ; விரைவில் கொண்டுவா.

**காவலன் :** சிறைப்பட்ட உமக்கு அவ-சரம் என்ன ?

**சேரன் :** என்ன ! இந்தச்சிறை காவல-னும் அலட்சியம் செய்யும் அளவு தாழ்ந்த நிலையை அல்லவா அடைந்துவிட்டேன் நான்! இவன் எவ்வளவு அலட்சியமாகப் பேசுகிருன்! இச்சொல்லைக் கேட்டும் நான் ஒன்றும் செய்ய இயலாதவனுய் அன்ருே இருக்கிறேன் ! என் வாழ்வும் ஒரு வாழ்வோ !

[இரண்டாம் களம்]

**இடம் :** சிறைச்சாலை
**காலம் :** நண்பகல்
**பாத்திரங்கள் :** சேரன், சிறை காவலன்

**காவலன் :** இதோ தண்ணீர் ! வாங்கிக்-கொள்ளும் ! இந்தச் செம்பு ஜலம் கொண்டு வருவதற்குள் என்னை விரட்டிவிட்டீரே !

**சேரன் :** அடே காவல, நான் தக்கபடி இருந்தால் உன் தலையையே கொய்திருப்பேன்! இவ்வாறு பேசிய நாவினை அறுத்திருப்பேன் !

**காவலன் :** ஆமாம் ! செய்வீர்! செய்வீர்! நீர் இப்பொழுது சிறையிலிருப்பவர் என்பதை

மறந்து பேசுகிறீரோ? இந்த நீர்ச் செம்பை வாங்கிக்கொள்ளும்.

(சேரன் நீர்ச்செம்பை வாங்கிக்கொள்கிறான். சேவகன் போகிறான்.)

**சேரன் :** என்ன அதிகாரம்! இதனைக் கேட்பது என் தலை விதியா! 'மானம் இழந்த பின் வாழாமை முன்னினிதே,' என்று நாம் படித்தோமே! சிறைப்பட்டேன் என்ற போதே என் உயிர் போயிருக்கவேண்டாவா? இந்த நீரைக்குடித்து உயிர் வாழவும் வேண்டுமோ! மானத்திற்காக வடக்கு நோக்கி இருந்து பட்டினி கிடந்து உயிர் விட்ட மன்னவர் குல மன்றோ நான் பிறந்த சேரர் குலம்!....நல்லது! உயிர் பெரிதன்று.

[செம்பைக் கீழே எறிந்து தரைமேல் விழுந்து இறக்கிறான்.]

## [மூன்றாம் களம்]

**இடம் :** அரண்மனை
**காலம் :** காலை
**பாத்திரங்கள் :** சோழன் செங்கணான், புலவர் பொய்கையார், மந்திரி, தளகர்த்தன், சேவகர்.

**காவலன் :** மன்னவரே, நீடு வாழ்க! பொய்கையார் வந்துள்ளார். சமயம் அறிந்து வருமாறு கூறினர்.

**சோழன் :** உடனே தாமதிக்காமல் சென்று அழைத்து வா.

[பொய்கையார் அரசன் அவையை அடைகிருர்.]

**சோழன் :** (எழுந்து முன்சென்று) வருக! புலவர் பெருந்தகையீர், நீங்கள் இங்கு இன்று வந்தது என் பாக்கியமே! என்றும் வாராத நீங்கள் இன்று இங்கு எளிவந்தது என் புண்ணியமே! அமர்க!

**பொய்கையார் :** சோழமன்ன, இன்று உன்னைக் காண வந்தது ஒரு முக்கியமான செய்தி குறித்தே. உன் போர் வெற்றியைக் குறித்துக் '**களவழி நாற்பது**' என்ற நூலையும் பாடி வந்துள்ளேன் ; கேட்டருள்க.

**சோழன் :** என் பாக்கியமே பாக்கியம்!

**பொய்கையார் :** சோழ, சேரன் என் மாணவன். அவன் செந்தமிழை என்பால் சிறக்கக் கற்றவன் ; நற்குணங்கள் பல வாய்ந்தவன். அவன் உன்னால் சிறை பிடிக்கப்பட்டுச் சிறையில் உள்ளான். அச்சேரனைச் சிறையினின்றும் விடுதலை செய்வித்து அழைத்துக்கொண்டு செல்லவே வந்தேன்.

**சோழன் :** அப்படியா? தமிழறிந்தவனு? உங்கள் மாணவனு? இதோ இப்பொழுதே சிறையினின்றும் விடுதலை செய்கிறேன்! நாம்

இருவருமே சிறைக் கூடத்திற்குச் செல்வோம் வாருங்கள்.

(சோழனும் புலவரும் சிறைக்கூடத்திற்குச் செல்கின்றனர்.

[நான்காம் களம்]

**இடம் :** சிறைக்கூடம்
**காலம் :** காலை
**பாத்திரங்கள் :** சோழன், பொய்கையார், இரு சேவகர், சிறை காவலன்.

(சேரன் பிணமாய்க் கிடக்கிருன்.)

**பொய்கையார் :** ஆ! மன்ன, நீ மண்மீது மாண்டு கிடக்கின்ருயே! நீ இவ்வாறு செய்வாய் என்பதை அறிந்து நான் எவ்வளவு வேகமாய் வந்தேன்! உன்னைக் காணக் கூடும், சிறை மீட்கக் கூடும் என்று விரைந்து வந்தேனே! இவ்வளவு விரைவில் உயிரை விட்டுவிடுவாய் என்று அறியாது போனேனே! ஆ! சேரர் குலக் கொழுந்தே! மானம் அன்ருே உனக்கு உயிர்! மானம் போனதும் உயிரும் போயிற்று.

**சோழன் :** புலவர் பெருந்தகையீர், சேரன் இவ்வளவு அருமையான நுண்ணுணர்ச்சி உடையவன் என்பதை அறியாது போனேன்! அந்தோ! 'சேரனைச் சிறைப்-

படுத்திச் சோழன் மறுவுற்ருன் !' என்று உலகோர் என்னை ஏசுவரே! இப்பாவத்தைக் கழிக்க யான் யாது செய்வேன்! பெரியீர், இனிச் செய்வதென்ன? அரசர்க்குரிய மரியாதைகளுடன் சேரன் உடலம் அவன் அரண்மனைக்கு அனுப்பப்படும். வருந்தாதீர். புலவரே, இப்பாவத்தைப் போக்க இனிக் கோயில்கள் பல கட்டுவேன். இனி என் ஆட்சிக் காலத்தில் யாவரிடத்தும் போர் புரியேன். நான் என்ன சொல்லி உங்களைத் தேற்றுவேன் !

**பொய்கையார்:** சோழ, உன்மீது தவறில்லை. இது விதியின் செயல். உன் ஏற்பாட்டின்படி சேரன் உடலைக் கொண்டு செல்கின்றேன்.

*[சோழனும் சேவகரும் செல்கின்றனர்; பொய்கையார் சேரன் உடலோடு சேர நாட்டிற்குச் செல்கிருர்.]*

**அரும்பதங்கள் :**

| | | |
|---|---|---|
| **பிதற்றுகிருய்** | **கொய்திருப்பேன்** | **வாழாமை** |
| **மானம்** | **நுண்ணுணர்ச்சி** | **மாசு** |
| **வறண்டு** | **பெருந்தகை** | **ஏசுவர்** |
| **பாக்கியம்** | **மறுவுற்ருன்** | |

**கேள்விகள் :**

1. சேரன் தனக்குத்தானே சிறையில் சொல்லிக்கொண்டது என்ன ?

2. சேரர் குலப் பெருமையை அவன் எங்ஙனம் கூறுகிறான் ?

3. பொய்கையார் யார்? அவர் சேரனைப் பற்றி என்ன கூறுகிறார் ?

4. அவர் பாடி வந்த நூல் யாது ?

பயிற்சி :

1. இந்த நாடகத்தை நடிக்க முயற்சி செய்.

2. இந்நாடகக் கதையைச் சுருக்கி எழுது.

3. 'மானமே உயிர்'—இத்தலைப்பு இந்நாடகத்திற்குப் பொருந்தும் முறையை விளக்கி எழுது.

4. விதியின் செயல், ஆட்சிக் காலத்தில், ஏற்பாட்டின்படி—இவற்றை அமைத்துத் தனித்தனி வாக்கியங்கள் எழுது.

5. 'அரசர்க்குரிய மரியாதைகளுடன் சேரன் உடலம் அவன் அரண்மனைக்கு அனுப்பப்படும்.'

இந்த வாக்கியத்தை 'நான்' என ஆரம்பித்துப் பொருள் கெடாதபடி எழுது.

# செய்யுட்பகுதி

## 1. இனியது

*இனியது கேட்கின் தனிநெடு வேலோய் !*
*இனிது இனிது ஏகாந்தம் இனிது ;*
*அதனினும் இனிது ஆதியைத் தொழுதல் ;*
*அதனினும் இனிது அறிவினர்ச் சேர்தல் ;*
*அதனினும் இனிது அறிவுள் ளோரைக்*
*கனவிலும் நனவிலும் காண்பது தானே.*

தனிநெடு வேலோய் - ஒப்பற்ற நீண்ட வேலாயுதத்தையுடையவனே. ஏகாந்தம் - தனிமை. அதனினும் - அதைவிட. ஆதி - கடவுள். அறிவினர் - புலவர்.

## 2. கொடியது

*கொடியது கேட்கின் நெடியவெவ் வேலோய் !*
*கொடிது கொடிது வறுமை கொடிது ;*
*அதனினும் கொடிது இளமையில் வறுமை ;*
*அதனினும் கொடிது ஆற்ெறுணுக் கொடுநோய் ;*
*அதனினும் கொடிது அன்புஇலாப் பெண்டிர்*
*இன்புற அவர்கையில் உண்பது தானே.*

கொடியது - தீயது. வெவ்வேல் - கொடிய வேல். வறுமை - தரித்திரம். ஆற்ற + ஒண்ணு — என்பது செய்யுளில் 'ஆற்ெறுணு' என்று வந்தது. ஆற்ற ஒண்ணு - தாங்க முடியாத. இலா - இல்லாத. பெண்டிர் - பெண்கள்.

## 3. பெரியது

*பெரியது கேட்கின் எரிதவழ் வேலோய் !*
*பெரிது பெரிது புவனம் பெரிது ;*
*புவனமோ, நான்முகன் படைப்பு ;*

நான்முகன் கரியமால் உந்தியில் வந்தோன் ;
கரிய மாலோ, அலைகடல் துயின்றோன் ;
அலைகடல் குறுமுனி அங்கையில் அடக்கம் ;
குறுமுனி யோகலசத்தில் பிறந்தோன் ;
கலசமோ, புவியில் சிறுமண் ;
புவியோ, அரவினுக்கு ஒருதலைப் பாரம் ;
அரவோ, உமையவள் சிறுவிரல் மோதிரம் ;
உமையோ, இறைவர் பாகத்து ஒடுக்கம் ;
இறைவரோ, தொண்டர் உள்ளத்து ஒடுக்கம் ;
தொண்டர்தம் பெருமை சொல்லவும் பெரிதே.

எரி - தீ, புவனம் - உலகம், உந்தி - கொப்பூழ், துயின்றோன் - தூங்கியவன், குறுமுனி - அகத்தியன், புவி - பூமி, அரவு - பாம்பு, இறைவர் - சிவபெருமான், ஒடுக்கம் - அடக்கம், தொண்டர் - அடியவர், உள்ளத்து - மனத்தில்.

### 4. அரியது

அரியது கேட்கின் வரிவடி வேலோய் !
அரிதுஅரிது மானிடர் ஆதல் அரிது ;
மானிடர் ஆயினும் கூன்குருடு செவிடு
பேடு நீங்கிப் பிறத்தல் அரிது ;
பேடு நீங்கிப் பிறந்த காலையும்,
ஞானமும் கல்வியும் நயத்தல் அரிது ;
ஞானமும் கல்வியும் நயந்த காலையும்,
தானமும் தவமும் தாம்செயல் அரிது ;
தானமும் தவமும் தாம்செய்வார் ஆயின்
வானவர் நாடு வழிதிறந் திடுமே.

—ஔவையார்

மானிடர் - மனிதர், ஞானம் - அறிவு, நயத்தல் - விரும்பல், வானவர் நாடு - சுவர்க்க லோகம்.

### 5. அன்னை

*ஐயிரண்டு திங்களாய் அங்கமெலாம் நொந்துபெற்றுப்*
*பையலென்ற போதே பரிந்தெடுத்துச்—செய்யஇரு*
*கைப்புறத்தில் ஏந்திக் கனிந்தமுது தந்தாளை*
*எப்பிறப்பில் காண்பேன் இனி!* 1

திங்கள்—மாதம், நொந்து—வருந்தி, பரிந்து—விரும்பி. அமுது—பால்.

*வட்டிலிலும் தொட்டிலிலும் மார்மேலும் தோள்மேலும்*
*கட்டிலிலும் வைத்தென்னைக் காதலித்து—முட்டச்*
*சிறகிலிட்டுக் காப்பாற்றிச் சீராட்டும் தாய்க்கோ*
*விறகிலிட்டுத் தீமுட்டு வேன்!* 2

காதலித்து—விரும்பி, சிறகில்—பக்கத்தில்.

*முந்தித் தவம்கிடந்து முந்நூறு நாள்சுமந்தே*
*அந்திபக லாய்ச்சிவனை ஆதரித்துத்—தொந்தி*
*சரியச் சுமந்துபெற்ற தாயார் தமக்கோ*
*எரியத் தழல்மூட்டு வேன்!* 3

ஆதரித்து—பத்தி செய்து, தொந்தி—வயிறு, தழல்—தீ.

—பட்டினத்துப் பிள்ளையார்

### 6. கல்லாதவர்

*கல்லாத மூடரைக் காணவும் ஆகாது;*
*கல்லாத மூடர்சொல் கேட்கக் கடனன்று;*
*கல்லாத மூடர்க்குக் கல்லாதார் நல்லராம்;*
*கல்லாத மூடர் கருத்து அறியாரே.*

—திருமூலர்

கடன்—கடமை, கருத்து—நற்பொருள்,

### 7. கர்வம் கூடாது.

*கற்றதுகைம் மண்ணளவு கல்லாது உலகுஅளவு*
*உற்ற கலைமடந்தை ஓதுகிருள்—மெத்த* [என்று

வெறும்பந் தயம்கூற வேண்டா புலவீர் !
எறும்பும்தன் கையால்எண் சாண்.

ஓதுகிருள் - படிக்கிருள், சொல்லுகிருள்.

### 8. பழக்கம்

சித்திரமும் கைப்பழக்கம் ; செந்தமிழும் நாப்பழக்கம் ;
வைத்ததுஒரு கல்வி மனப்பழக்கம் ;—நித்தம்
நடையும் நடைப்பழக்கம் ; நட்பும் தயையும்
கொடையும் பிறவிக் குணம்.

நித்தம் - தினமும், நடை - ஒழுக்கம், கொடை - ஈகை, தயை - இரக்கம்.

—ஔவையார்

### 9. வாக்குண்டாம்

வாக்குஉண்டாம் ; நல்ல மனம்உண்டாம் ; மாமலராள்
நோக்குஉண்டாம் ; மேனி நுடங்காது ;—பூக்கொண்டு
துப்புஆர் திருமேனித் தும்பிக்கை யான்பாதம்
தப்பாமல் சார்வார் தமக்கு. 1

மாமலராள்—திருமகள், நோக்கு—பார்வை, தும்பிக்கையான்—விநாயகக் கடவுள், தப்பாமல்—தவருமல்,

நல்லார் ஒருவர்க்குச் செய்த உபகாரம்
கல்லில் எழுத்துப்போல் காணுமே ;—அல்லாத
ஈரம்இலா நெஞ்சத்தார்க்கு ஈந்த உபகாரம்
நீர்மேல் எழுத்துக்கு நேர். 2

ஈரம் - கருணே, நெஞ்சத்தார் - மனமுடையவர்.

நற்ற மரைக்கயத்தில் நல்அன்னம் சேர்ந்தாற்போல்
கற்ருரைக் கற்ருரே காமுறுவர்;—கற்புஇலா
மூர்க்கரை மூர்க்கர் முகப்பர்; முதுகாட்டில்
காக்கை யுகக்கும் பிணம். 3

கயம்-குளம், காமுறுவர் - விரும்புவர், கற்பு - கல்வி, முகப்பர் - விரும்புவர், முதுகாடு - சுடுகாடு, உகக்கும் - விரும்பும்,

*மன்னனும் மாசுஅறக் கற்ரோனும் சீர்தூக்கின்*
*மன்னனில் கற்ரோன் சிறப்புடையன் :—மன்னற்குத்*
*தன்தேசம் அல்லால் சிறப்பு இல்லை; கற்ரோற்குச்*
*சென்றஇடம் எல்லாம் சிறப்பு.* 4

மாசற - குற்றம் ஒழிய, சீர்தூக்கின் - ஆராய்ந்தால், மன்னனில் - அரசனைப்போல.

—*ஔவையார்*

## *10. நல்வழி*

*பாலும் தெளிதேனும் பாகும் பருப்பும்இவை*
*நாலும் கலந்துஉனக்கு நான்தருவேன்—கோலம்செய்*
*துங்கக் கரிமுகத்துத் தூமணியே ! நீ எனக்குச்*
*சங்கத் தமிழ்மூன்றும் தா.* 1

பாகும் - வெல்லப்பாகும், கோலம் - அழகு, துங்கம்- தூய்மை (குற்றமில்லாத இயல்பு), கரி - யானை, சங்கத் தமிழ் மூன்று - இயல், இசை, நாடகம் என்ற மூவகைப் பட்ட தமிழ்.

*சாதி இரண்டுஒழிய வேறில்லை ; சாற்றுங்கால்*
*நீதி வழுவா நெறிமுறையின்—மேதினியில்*
*இட்டார் பெரியோர் ; இடாதார் இழிகுலத்தோர் ;*
*பட்டாங்கில் உள்ள படி.* 2

—*ஔவையார்*

சாற்றுங்கால் - சொல்லும் போது, நீதி - நியாயம், வழுவா-தவருத, மேதினி - உலகு, இழிவு - தாழ்வு, பட்டாங்கு - சாஸ்திரம்.

## 11. நீதி வெண்பா

கண் இரண்டே யாவர்க்கும்; கற்றோர்க்கு மூன்றுவிழி;
எண்ணும்விழி ஏழாகும் ஈவோர்க்கு:—நண்ணும்
அநந்தம் தவத்தால் அருள்ஞானம் பெற்றோர்க்கு
அநந்தம் விழிஎன்று அறி. 1

நண்ணும்—பொருந்தும், அநந்தம்—மிகுதி.

கொம்புஉளதற்கு ஐந்து, குதிரைக்குப் பத்துமுழம்,
வெம்புகரிக்கு ஆயிரந்தான் வேண்டுமே;—வம்புசெறி
தீங்கினர்தம் கண்ணில் தெரியாத தூரத்து 2
நீங்குவதே நல்ல நெறி.

வம்பு - சண்டை, செறி - மிகுந்த, தீங்கினர் - கெட்டவர், நெறி - முறை.

## 12. கலை மகள்

வெள்ளைத் தாமரைப் பூவி லிருப்பாள்;
வீணை செய்யும் ஒலியி லிருப்பாள்;
கொள்ளை யின்பங் குலவு கவிதை
கூறு பாவலர் உள்ளத் திருப்பாள்:
உள்ள தாம்பொருள் தேடி யுணர்ந்தே
ஓதும் வேதத்தின் உள்நின் றொளிர்வாள்;
கள்ளம் அற்ற முனிவர்கள் கூறும்
கருணை வாசகத் துட்பொரு ளாவாள். 1

ஒலி - சத்தம், கொள்ளை - மிகுதி, குலவு - நிறைந்த, பாவலர் - கவிஞர், உள்ளம் - மனம், கள்ளம் - வஞ்சனை, கவிதை - செய்யுள், ஒளிர்வாள் - விளங்குவாள்.

வஞ்ச மற்ற தொழில்புரிந் துண்டு
வாழு மாந்தர் குலதெய்வ மாவாள்;
வெஞ்ச மர்க்குயி ராகிய கொல்லர்
வித்தை யோர்ந்திடு சிற்பியர் தச்சர்

மிஞ்ச நற்பொருள் வாணிகஞ் செய்வோர்
வீர மன்னர்பின் வேதியர் யாரும்
தஞ்ச மென்று வணங்கிடுந் தெய்வம்
தரணி மீதறி வாகிய தெய்வம். 2

சமர் — சண்டை, தஞ்சமென்று — அடைக்கலம் என்று, தரணி — உலகம்.

தெய்வம் யாவும் உணர்ந்திடுந் தெய்வம்
தீமை காட்டி விலக்கிடுந் தெய்வம்
உய்வ தென்ற கருத்துடை யோர்கள்
உயிரி னுக்குயி ராகிய தெய்வம்
செய்வ மென்றொரு செய்கை யெடுப்போர்
செம்மை நாடிப் பணிந்திடு தெய்வம்
கைவ ருந்தி உழைப்பவர் தெய்வம்
கவிஞர் தெய்வம் கடவுளர் தெய்வம். 3

உய்வம் — பிழைப்போம், கருத்துடையோர்கள் — எண்ணமுடையவர்கள், பணிந்திடும் — வணங்கிடும்.

வீடு தோறும் கலையின் விளக்கம்
வீதி தோறும் இரண்டொரு பள்ளி
நாடு முற்றிலும் உள்ளன வூர்கள்
நகர்க ளெங்கும் பலபல பள்ளி
தேடு கல்வி யிலாததோ ரூரைத்
தீயி னுக்கிரை யாக மடுத்தல்
கேடு தீர்க்கும் அமுதமென் அன்னை
கேண்மை கொள்ள வழியிவை கண்டீர். 4

பள்ளி — பாடசாலை, கேண்மை — நட்பு.

இன்ன றுங்கனிச் சோலைகள் செய்தல்
இனிய நீர்த்தண் சுனைக ளியற்றல்
அன்ன சத்திர மாயிரம் வைத்தல்
ஆல யம்பதி னாயிரம் நாட்டல்
பின்ன ருள்ள தருமங்கள் யாவும்
பெயர்வி ளங்கி யொளிர நிறுத்தல்
அன்ன யாவினும் புண்ணியங் கோடி
ஆங்கோ ரேழைக் கெழுத்தறி வித்தல். 5

—சி. சுப்பிரமணிய பாரதியார்

நறுங்கனி — வாசனையான பழம், சுனை — நீர்நிலை, நாட்டல் — உண்டாக்குதல், ஒளிர—விளங்க, அன்ன யாவினும்—அப்படிப்பட்டவை எல்லாவற்றையும்விட.

# DEIVA TAMIL VACHAKAM

## STANDARD V

BY :

Vidwan **I. NATESA PILLAI**

Publishers :

**V. C. VENKATESAN & CO.,**

MOOR-MARKET : : MADRAS—3

Price As. 9